# மார்டின் லூத்தர்



# மார்ட்டின் லூத்தர்

தா. கோயில்பிச்சை, எம்.ஏ., பீ.ஓ.எல்.

**சுவிசேஷ ஊழிய நூல் நிலையம்**
95-A, வேப்பேரி நெடுஞ்சாலை
சென்னை-600 007

# முகவுரை

''வாயும் பேசும், வாழ்க்கையும் பேசும்'' என்பர். ஆனால், வாயினும் வாழ்க்கையே அதிக வேகமாய், விறு விறுப்பாய், அழுத்தமாய், ஆழமாய், உணர்ச்சி ததும்பப் பேசவல்லது. வாய் மறைந்தாலும், வாழ்க்கை பேசிக் கொண்டேயிருக்கும். ''அவன் மரித்தும் இன்னும் பேசு கிறான்.''

அவ்வாறே, மார்ட்டின் லூத்தர் மரித்தும் இன்னும் பேசுகிறார். பதினாறாம் நூற்றாண்டில் கிறிஸ்துவுக்காக வாழ்ந்த லூத்தர், எல்லாக் காலத்திலும், எல்லா நாட்டிலும், எல்லா மதத்திலும் எல்லாச் சாதியிலுமுள்ள எல்லா மக்களுக் கும் தேவையான உயிரானவர் இயேசு கிறிஸ்துவே என்பதை அழுத்தந் திருத்தமாய் அறை கூவியுள்ளார். அவரது வாழ்க்கை வரலாறு இன்றும் கிறிஸ்துவையே பறை சாற்றுகிறது. மனித வாக்கையல்ல, தெய்வ வாக்கை நம்பி வாழ்ந்தவர் அவர். ''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்'' (ரோமர் 1:17) என்ற தெய்வ வாக்கு. அவர் கிறிஸ்துவுக்குள் ஜீவனையும் முக்தியின்பத்தையும் கண்டு களிக்குமாறு செய் தது. ''யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்றாற் போல லூத்தர் கிறிஸ்துவுக்குள், கிறிஸ்துவின் கிருபையால், கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தின்மூலம் பெற்றுக்கொண்ட பேரின்பத்தை இவ்வையகத்தார் அனைவரும் பெற்று மகிழ வேண்டும் என்று விழைகிறார்.

திரு. தா. கோயில்பிச்சை இப்புத்தகத்தைக் கிறிஸ்து மணம் கமழ, கிறிஸ்துவின் திருநாம மகிமைக்காக எழுதி யுள்ளார். அவருக்கு எம் அகங்கனிந்த நன்றி.

கிறிஸ்தவப் பக்தர்களின், ''வாழ்க்கை வரலாறுகள்'' வரிசையில் சென்னை சுவிசேஷ ஊழிய நூல் நிலையம் (**Evangelical Literature Service**) இவ்விழுமிய நூல்தனை ஜெபத்துடன் வழங்குகிறது. இன்றைய உலகுக்கு ஒன்றல்ல, இரண்டல்ல, எண்ணிறந்த மார்ட்டின் லூத்தர்கள் வேண்டும்!

**பதிப்பாளர்**

# பொருளடக்கம்

# 1

# தோற்றுவாய்

''ஆண்டவமாரே, இரட்சிக்கப்படுவதற்கு நான் என்ன செய்யவேண்டும்'' என்றான்.

''அதற்கு அவர்கள்: கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப் படுவீர்கள்'' என்றார்கள் (அப். 16:30,31).

திருச்சபையின் தலைவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து. அதை ஆரம்பித்தவரும் அவரே; அதை ஆண்டு நடத்துகிற வரும் அவரே; அதன் உயிரோட்டமும் அவரே; அதன் இறுதி இலக்கும் அவரே; அதன் மணி மகுடமும் அவரே. இயேசு கிறிஸ்து இன்றேல் திருச்சபையும் இல்லை. இறைவன் இயேசுவே திருச்சபையில் இடையறாது தொடர்ந்து செய லாற்றி வருகிறார். அவரது அடியாரும் அவரோடு சேர்ந்து இணைந்து பிணைந்து இசைந்து இனிதே பணியாற்றுவதற்கு அழைக்கப்பட்டுள்ளார்கள். அவரது அடியார் அவரோடு ஒத்துழைக்கும்போது, கிறிஸ்துவின் நாமம் மகிமைப்படு கிறது; கிறிஸ்துவின் இராச்யம் பரவுகிறது; கிறிஸ்துவின் சித்தம் நிறைவேறுகிறது.

ஆனால் கிறிஸ்துவோடே சேர்க்காதவன் சிதறடிக்கிறான் (மத். 12:30). ஆத்துமாக்களைச் சிலுவை நாதரண்டைச் சேர்க்காதவன் சிதறடிக்கிறான். ஆத்துமாக்களைக் கிறிஸ்து வண்டை வழிநடத்துவதுதான் கிறிஸ்தவ அடியாரின் தனிப் பெரும் திருத்தொண்டாகும். ''ஸ்திரீகளிடத்தில் பிறந்த வர்களில் பெரியவன்'' என்று இயேசுநாதரால் பாராட்டப் பெற்ற பரிசுத்த யோவான் ஸ்நானன் ஆற்றிய திருத் தொண்டும் இதுதான். அவன் மக்களைக் கிறிஸ்துவிடம் வழி

நடத்தினான். தனது சீடர்கள் இயேசு கிறிஸ்துவைப் பின் பற்றுமாறு செய்தான். இயேசு ஒருவரே உலகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற தேவாட்டுக்குட்டி என்று சுட்டிக் காட்டினான். அவர் பெருகவேண்டும்; தான் சிறுகவேண்டும் என்றான். பரலோகத்திலிருந்து வந்த இறைவன் இயேசு நாதர் எல்லாரிலும் மேலானவர் என்றான். ''பிதாவானவர் குமாரனில் அன்பாயிருந்து எல்லாவற்றையும் அவர் கையில் ஒப்புக்கொடுத்திருக்கிறார். குமாரனிடத்தில் விசுவாசமா யிருக்கிறவன் நித்திய ஜீவனை உடையவனாயிருக்கிறான்; குமாரனை விசுவாசியாதவனோ ஜீவனைக் காண்பதில்லை, தேவனுடைய கோபம் அவன் மேல் நிலைநிற்கும் என்றான்.''

யோவான் ஸ்நானன் மட்டுமல்ல, ஒவ்வொரு கிறிஸ்தவத் தொண்டனும் உலகுக்குக் பறை சாற்றவேண்டிய நற்செய்தி இயேசு கிறிஸ்துதான். இரட்சிக்கப்படுவதற்கு நான் என்ன செய்யவேண்டும் என்று சிறைச்சாலைக்காரன் பரிசுத்த பவுலிடம் வினவியபொழுது, ''கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்'' என்று அவன் விடை யிறுத்தான் (அப். 16:31). இதுதான் கிறிஸ்தவ நற்செய்தி யாகும். கிறிஸ்தவ நெறியின் பிழிசாறு இதுவே. கிறிஸ்தவ மார்க்க உபதேச இரத்தினச் சுருக்கம் இதுதான். ''இயேசுவை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் வெட்கப்படுவதில்லை'' (ரோமர் 10:11). ''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப் பான்'' (ரோமர் 1:17). இயேசு கிறிஸ்துவைப்பற்றிய விசுவாசம்தான் கிறிஸ்தவ மார்க்கத்தின் அடிப்படை உயிராகும். இயேசு கிறிஸ்துவே கண் கண்ட தெய்வம் என்று நம்பும் நம்பிக்கையில்தான், கிறிஸ்தவ மார்க்கம் உறுதியாகக் கட்டப்பட்டுள்ளது. இயேசு நாதரை ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று சீமோன் பேதுரு அறிக்கையிட்டபோது, ''இந்தக் கல்லின்மேல் என் சபையைக் கட்டுவேன்'' என்று இயேசு நாதர் திருவுளம் பற்றினார் (மத். 16:16—18). இயேசுவே கண் கண்ட தெய்வம்.

இறைவன் இயேசு ஒருவரே உலகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற தேவாட்டுக்குட்டி. இயேசு சுவாமி ஒருவரே உலக இரட்சகர். அவர் எல்லா மக்களுக்கும் உரிய இரட்சகர். அகில உலகத்திற்கும் உரிய இரட்சகர். தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டபோது, விண்ணுலகிலிருந்து தேவ தூதன் மாந்தர்க்கு அறிவித்த நற்செய்தி இதுதான். ''இதோ, எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன். இன்று கர்த்த ராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார்'' (லூக்கா 2:10,12).

''பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார் என்கிற வார்த்தை உண்மையும் எல்லா அங்கீகரிப் புக்கும் பாத்திரமுமானது'' (1 தீமோ. 1:15). ''உலகத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்படி தேவன் தம்முடைய குமாரனை உலகத்தில் அனுப்பாமல் அவராலே உலகம் இரட் சிக்கப்படுவதற்காகவே அவரை அனுப்பினார்'' (யோவான் 3:17). ''தேவன், தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார்'' (யோவான் 3:16). ''அவருடைய (இயேசுவுடைய) உபதேசத்தை நாங்களே கேட்டு, அவர் மெய்யாய்க் கிறிஸ்துவாகிய உலக இரட்சகர் என்று அறிந்து விசுவாசிக்கிறோம் என்றார்கள்'' (யோவான் 4:42). ''அவரே (கிறிஸ்து இயேசுவே) தேவனால் நமக்கு ஞானமும் நீதியும் பரிசுத்தமும் மீட்புமானார்'' (1 கொரி. 1:31). எனவே, இயேசு கிறிஸ்துதான் நமக்கு மீட்பு அதாவது இரட்சிப்பு ஆகிறார். இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவன் இரட்சிப்பு அடைகிறான். இயேசுகிறிஸ்துவால் மட்டுமே நமக்குப் பாவ மன்னிப்புக் கொடுப்பதற்கு அதிகாரம் உண்டு. பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷ குமாரனுக்கு அதிகாரம் உண்டு (மத். 9:6). இயேசு கிறிஸ்துவின் இரத்தம் மட்டுமே நமது சகல பாவங்களையும் நீக்கி நம்மைச் சுத்தி கரிக்க வல்லது (1 யோவான் 1:7).

இயேசு கிறிஸ்துவைத் தவிர வேறு யாருக்கேனும் பாவ மன்னிப்பு அளிக்க அதிகாரம் இல்லை. தங்கள் பாவங்களுக்காக உண்மையாய் மனம் வருந்தி, மனம் திரும்பி இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, அவரை நோக்கி முழு இருதயத்தோடும் பாவ மன்னிப்புக்காகக் கிறிஸ்துவின் சிலுவைப் புண்ணியத்தை முன்னிட்டுக் கெஞ்சுகிறவர்களுக்கு இயேசுநாதர் நிச்சயமாய்ப் பாவ மன்னிப்பு அளிக்க முன் வருகிறார் என்ற நற்செய்தியை அறிவிக்கவே ஒரு குருவானவருக்கு உரிமை உண்டே தவிர, தானாகப் பாவ மன்னிப்பு அளிப்பதற்கு எந்தக் குருவுக்கும் எந்தப் போப்புவுக்கும் அதிகாரம் இல்லவே இல்லை. ஆனால் அக்காலங்களில் போப்பு பாவ மன்னிப்புச் சீட்டுகளைப் பணத்திற்கு விற்பது வழக்கமாகி இருந்தது. ''உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன'' என்று போப்பு எழுதிக் கொடுத்த சீட்டுகளைப் பணம் கொடுத்து விலைக்கு வாங்கினால், தங்கள் பாவங்கள் மன்னிக்கப்படும் என மக்கள் எண்ணினர்! அந்தோ பரிதாபம்! எவ்வளவு பயங்கர தவறு!!

மத்திய காலத்தில் சிலுவைப் போருக்குப் போவோருக்கெல்லாம் அவர்கள் தங்கள் பாவங்களுக்காக இம்மையிலும் உத்தரிக்கும் தலத்திலும் அனுபவிக்கவேண்டிய சகல அநித்திய தண்டனைகளும் நீங்கிப் போகுமென்று மக்கள் கருதினர். சிலுவைப் போருக்குப் போகமுடியாதவர்கள் ஒரு தொகையைக் கோயிலுக்குச் செலுத்திவிட்டால் அதே வாய்ப்பை அடையலாமென்கிற கொள்கையைப் போப்பு ஏற்படுத்தினார். துவக்கத்தில் பிணியாளர், வயதில் மூத்தோர் முதலியவர்களுக்காக இவ்வொழுங்கு ஏற்பட்டதேயன்றி போப்புவின் வருமானத்தைக் கருதி உண்டானதன்று. வர வர இதனால் ஏராளமான வருவாய்க்கு வழி உண்டென்று புலப்படவே, பிற்காலத்தில் பாவமன்னிப்புச் சீட்டுகளை விற்பதற்குப் பணவரும்படியே முக்கிய நோக்கமாகி விட்டது. சிலுவைப்போர் முடிந்த பின்னர், இப்போருக்குப் போவதற்குப் பதிலாக, சில சிறப்பு விழாக்களை முன்னிட்டு ரோமா

புரிக்குச் செல்லும் புண்ணிய யாத்திரைப் பழக்கத்தை ஏற் படுத்தினார்கள். அச்சமயங்களில் மக்கள் பாவ மன்னிப்பைப் பெற்றுக்கொள்ளவும், அப்புண்ணிய யாத்திரை செய்ய இய லாதவர்கள் மேற்படி பாவ மன்னிப்பை விலைக்கு வாங்கிக் கொள்ளவும் ஏற்பாடாயிற்று.

மேற்கூறப்பட்ட சீட்டுகளை வாங்குகிற ஒவ்வொருவரும் தான் அநித்திய தண்டனைகளுக்கு மட்டும் நீங்கலாமே யொழிய, நகரத்தில் அனுபவிக்கவேண்டிய நித்திய தண்ட னைக்கு நீங்கலாக முடியாதென்கிற பயமிருந்ததால், பொது மக்கள் அதிக விலை கொடுத்து இச்சீட்டுகளை வாங்க மாட்டார்களென்று கண்டு, நித்திய தண்டனைக்கு நீங்கலாக் கும் பாவ அறிக்கை (Confession) என்னும் உயரிய நெறி யோடு இவ்வியாபாரத்தைச் சம்பந்தப்படுத்திவிட்டார்கள், சபையார் தங்களுக்குப் பிரியமான குருவிடம் பாவங்களை அறிக்கை செய்ய அனுமதிக்கும் மன்னிப்புச் சீட்டுகளை விலைக்கு விற்க ஆரம்பித்தார்கள். இச்சீட்டுகளை விற்கும் வியாபாரிகளோடு எல்லாப் பாவங்களையும் இலேசாய்க் கணித்து மன்னிக்கக்கூடிய ஒரு குரு செல்வார். மக்கள் அந்த வியாபாரியிடம் சீட்டை விலைக்கு வாங்கி அநித்திய தண்டனையினின்று விடுதலை பெற்றவுடன், அருகே நிற்கும் குருவிடம் பாவ அறிக்கை செய்து, உடனே வெகு இலகுவில் நித்திய தண்டனையினின்றும் விடுதலையாகிவிடுவார்கள். மெய்யான பாவ மனஸ்தாபமும் மனந்திரும்புதலும் இல்லாமல் செய்யும் பாவ அறிக்கையும் மன்னிப்பு கூறுதலும் திருச்சபையின் கொள்கைக்கு முற்றிலும் விரோதமாயிருந்தும், அதுதான் அக்காலத்தில் பழக்கத்திலிருந்து வந்தது. இவ்வியா பாரத்தால் பாவ மன்னிப்பும் நித்திய மோட்சமும் பணத் திற்கு விற்கப்பட்டு வந்தன என்று தயங்காமல் கூறலாம்.

இத்தகைய பாவ மன்னிப்புச் சீட்டு வியாபாரம் வேதா கமச் சத்தியத்திற்கு எவ்வளவு விரோதமானது என்பதை நாம் அறிவோம். பாவ மன்னிப்புச் சீட்டுகள் வாங்கினால் இவ்வுலகில் உள்ளவர்களின் பாவங்கள் மட்டும் அல்ல,

உத்தரிக்கும் தலத்திலுள்ள இறந்தோரின் பாவங்களும் மன்னிக்கப்படும் என்னும் குருட்டெண்ணமும் அக்கால மக்களுக்குள் பரவி இருந்தது. திருச்சபைக்குப் பாவங்களையெல்லாம் மன்னிக்கும் உரிமை எங்கேயிருந்து வந்தது என்னும் வினாவிற்குப் போப்பு தந்த விடை பின்வருமாறு. 'பக்தர்களின் நற்செயல் கருவூலம்' (Treasury of Merit) எங்களிடம் இருக்கிறது. அந்நற்செயல் கருவூலத்தின் புண்ணியத்தால் பாவங்களை மன்னிக்க உரிமை பெற்றுள்ளோம்.

இவையெல்லாம் எவ்வளவு தவறான கொள்கைகள்! ஆனால் அக்காலப் போப்புவுக்கு இவை தவறான கருத்துக்கள் என்பதுகூடத் தெரிந்தும் தெரியாமல் போய்விட்டதன்றோ! அது மட்டும் அல்ல. அதிகாரம் மிக்க அக்காலப் போப்புவுக்கு எதிராக எழுந்து நின்று, ''போப்பானவர்களே, நீங்கள் செய்யும் இக்காரியம் முற்றிலுமாய் தவறு. பாவ மன்னிப்புச் சீட்டுகளைப் பணத்திற்கு விற்பனை செய்வது வேதாகமப் போதனைக்கு விரோதமானது'' என்று இடித்துரைக்கக்கூடிய துணிச்சல் எவருக்கு வரும்? அவ்வாறு கண்டித்துரைத்த யோவான் அஸ் (John Huss), ஜிரோலாமோ செவனரோலா (Girolamo Savonarola) போன்ற சிறந்த விசுவாச வீரச் சிங்கங்கள் போப்புவால் துன்புறுத்தப்பட்டுக் கொலையுண்டார்களே! போப்பானவருக்கு அவ்வளவு அதிகாரம் இருந்தது. போப்பு வாக்கு தெய்வவாக்காகக் கருதப் பட்டது.

எனவே, பதினாறாம் நூற்றாண்டில் திருச்சபை சீர் திருத்தப்படவேண்டிய அத்தியாவசியம் ஏற்பட்டது. அதற்கென்று திருச்சபையின் நாயகரான இறைவன் இயேசு நாதர் ஒரு மனிதனை உருவாக்கி,பயிற்சி அளித்து பயன்படுத்தினார். அந்த மனிதன் பெயர்தான் மார்ட்டின் லூத்தர்!

''பவுல் யார்? அப்பொல்லோ யார்? கர்த்தர் அவனவனுக்கு அருள் அளித்தபடியே நீங்கள் விசுவாசிக்கிறதற்கு ஏதுவாயிருந்த ஊழியக்காரர்தானே. நான் நட்டேன்,

அப்பொல்லோ நீர்ப்பாய்ச்சினான். தேவனே விளையச் செய்தார். அப்படியிருக்க, நடுகிறவனாலும் ஒன்றுமில்லை, நீர்ப்பாய்ச்சுகிறவனாலும் ஒன்றுமில்லை, விளையச் செய்கிற தேவனாலே எல்லாமாகும்'' (1 கொரி. 3:5-7).

ஒருவனும் மனுஷரைக் குறித்துப் பெருமை பாராட்டலாகாது. ''நீங்கள் கிறிஸ்துவினுடையவர்கள்'' (1 கொரி. 3:21,23).

எனக்கு அளிக்கப்பட்ட தேவ கிருபையின்படியே புத்தியுள்ள சிற்பாசாரியைப்போல அஸ்திபாரம் போட்டேன். வேறொருவன் அதின்மேல் கட்டுகிறான். அவனவன் தான் அதின்மேல் இன்னவிதமாய்க் கட்டுகிறானென்று பார்க்கக்கடவன். போடப்பட்டிருக்கிற அஸ்திபாரமாகிய இயேசு கிறிஸ்துவை அல்லாமல் வேறே அஸ்திபாரத்தைப் போட ஒருவனாலும் கூடாது'' (1 கொரி. 3:10,11).

''இயேசு கிறிஸ்துவை, சிலுவையில் அறையப்பட்ட அவரையேயன்றி, வேறொன்றையும் உங்களுக்குள்ளே அறியாதிருக்கத் தீர்மானித்திருந்தேன்'' (1 கொரி. 2:2).

உன்றன் மனை திருச்சபையை
உலக மெங்கும் வளர்ந்திடுவாய்.
பந்தமறப் பரிகரித்தே
பாக்யம் அளித் தாண்டருள்வாய்.

# 2

# விளையும் பயிர் முளையிலே

## இளைஞரான மார்ட்டின் லூத்தர்

**நா**ன் உன்னைத் தாயின் வயிற்றில் உருவாக்கு முன்னே உன்னைத் தெரிந்துகொண்டேன்; நீ கர்ப்பத்திலிருந்து வெளிப்படுமுன்னே நான் உன்னைப் பரிசுத்தப்படுத்தி ஜாதி களுக்குத் தீர்க்கதரிசியாக உன்னை நியமித்தேன் (ஏரே. 1:5).

''கர்த்தர் ராஜரீகம் பண்ணுகிறார்.'' அவருடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோல, பூமியிலேயும் செய்யப்படவேண்டும். அவருடைய சித்தத்தைச் செய்வதற்கு மனிதர் வேண்டும். ''யாரை நான் அனுப்புவேன், யார் நமது காரியமாய்ப் போவான்?'' என்று உரைக்கிற ஆண்ட வருடைய சத்தம் தனது காதில் விழுந்தவுடனே அதற்கு முற்றிலும் கீழ்ப்படிந்து செயலாற்றுகிற மனிதன் பாக்கிய வான். தமது காரியத்தை நிறைவேற்றுவதற்காக ஆண்டவர் அந்தந்தக் காலத்தில் எந்தெந்த மனிதர் வேண்டுமோ அவர்களைத் தமது சித்தம்போல தெரிந்தெடுத்து, அவர் களை அந்தந்த வேலைக்கென்று பக்குவப்படுத்தி, தமது பரிசுத்தாவியானவரின் விசேஷித்த அனுக்கிரகத்தையும் அருளிச்செய்து, அவர்களைப் பயன்படுத்துகிறார். ஆதித் திருச்சபையில் புறஜாதிகளுக்கும் இராஜாக்களுக்கும் இஸ்ர வேல் புத்திரருக்கும் தமது திருநாமத்தை அறிவிப்பதற்காக ஆண்டவர் பவுலைத் தெரிந்துகொண்டார். ''அவன் புற ஜாதிகளுக்கும் இராஜாக்களுக்கும் இஸ்ரவேல் புத்திரருக்கும் என்னுடைய நாமத்தை அறிவிக்கிறதற்காக நான் தெரிந்து கொண்ட பாத்திரமாயிருக்கிறான். அவன் என்னுடைய நாமத்தினிமித்தம் எவ்வளவாய்ப் பாடுபட வேண்டுமென்

பதை நான் அவனுக்குக் காண்பிப்பேன் என்றார்'' (அப். 9:15,16).

மத்திய கால ஆரம்பத்தில் ஆண்டவர் தமது திருநாம மகிமைக்காகக் கொழுந்துவிட்டு எரியுமாறு ஆப்பிரிக்காக் கண்டத்து அகுஸ்தீன், அசிசிப் பட்டணத்துப் பிரான்சிஸ் போன்ற அடியார்களைத் தமது கையிலெடுத்துப் பயன்படுத்தினார். பதினாறாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் இயேசு கிறிஸ்துவைப்பற்றிய விசுவாசத்தின் மேன்மையையும் பரிசுத்த வேதாகமத்தின் அருமையையும் அகில உலகத்திற்கும் அறை கூவுவதற்காக ஆண்டவர் மார்ட்டின் லூத்தரைத் தெரிந்து கொண்டார். இளமையிலிருந்தே இத்திருப்பணிக்கெனக் கர்த்தர் மார்ட்டின் லூத்தரைப் பக்குவப்படுத்தி வந்தார். அதிக கட்டுப்பாடும் கண்டிப்பும் உள்ள ஓர் ஏழைக் குடும்பத்தில் மார்ட்டின் லூத்தர் பிறந்தார். எளிய உணவு உண்டு, அல்லும் பகலும் அயராது உழைக்கும் அரிய பண்புதனை அவர் இளமையிலிருந்தே தமது பெற்றோரிடமிருந்து கற்றுக் கொண்டார். வறுமையில் செம்மையும், வேலையில் உண்மையும், கல்வி ஊக்கமும், இசையில் ஆர்வமும், வாக்கில் வன்மையும், பேச்சில் சாதுரியமும் மார்ட்டின் லூத்தர்பால் இளமையிலிருந்தே துளிர்த்து வளர்ந்து வந்த பண்புகளாகும். விளையும் பயிர் முளையிலே தெரியும் அன்றோ!

பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஜெர்மன் நாட்டில் ஹன்ஸ் லூத்தர் என்னும் குடியானவரொருவரிருந்தார். மார்கரேட் அம்மையார் இவருக்குச் சிறந்த வாழ்க்கைத் துணைவியராக அமைந்தார். அவருடைய முன்னோர்களும் உழுதுண்டு வாழ்ந்தவர்களே. எனினும் ஹன்ஸ் லூத்தர் தமக்கு விவசாயத்தில் கிடைக்கும் வருவாயைக் கொண்டு தமது குடும்பத்தைப் பராமரிக்க முடியாது தத்தளித்த காரணத்தால் தமது பிறந்தகத்தை விட்டு சாக்சோனிய மாவட்டத்திலுள்ள ஐஸ்லேபன் (**Esileben**) என்னும் ஊரில் குடியேறி, செப்புச் சுரங்கங்களில் பணியாற்றும் ஒரு தொழிலாளியாய் அமர்ந்துகொண்டார். இந்த ஐஸ்லேபன் கிராமத்தில் லூத்தர்

தம்பதியார் கர்த்தருக்குப் பயந்து உத்தம வாழ்க்கையாற்றி வருங்கால், கர்த்தர் அவர்கள் கர்ப்பத்தை ஆசீர்வதிக்கச் சித்தங்கொண்டார். 1483-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 10-ஆம் தேதி இவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. பரிசுத்த மார்ட்டின் திருநாளுக்கு முந்தின தினத்தில் இந்த ஆண் மகவு உதித்த காரணத்தால் அதற்கு மார்ட்டின் லுத்தர் என்று பெயரிட்டார்கள்.

மார்ட்டின் லுத்தர் ஆறுமாதக் குழந்தையாய் இருந்த பொழுது, அவருடைய பெற்றோர் வேலையினிமித்தம் ஐஸ்லேபனை விட்டு மான்ஸ்பெல்ட் (Mansfeld) என்னும் நகர் சென்று வாழ நேரிட்டது. ஆரம்பத்தில் போதிய ஊதியமின்றி இவர்கள் வறுமையில் வாடினர். காட்டிற்குச் சென்று விறகு வெட்டி அவற்றை முதுகில் சுமந்து வந்து, தங்கள் குடும்பத்தைப் பராமரிக்கும் பொறுப்பில் ஒருகால் மார்கரேட் லுத்தர் அம்மையாரும் மனமுவந்து முன்னின்றாரென்றால் அவ்வம்மையாரின் அருமை பெருமைகளை என்னென்றிம்புவது! லுத்தர் அம்மையார் ஓய்வின்றி ஒழிவின்றி உழைத்து, உழைத்த உழைப்பிலே இன்பம் காண்பவர். 'தாயைப்போலப் பிள்ளை, நூலைப்போலச் சேலை' என்ற பழமொழிக்கிணங்க, மார்ட்டின் லுத்தரும் இளமையிலிருந்தே உழைப்பின் அருமையைத் தமதருமைத் தாயாரிடமிருந்து பயின்று வந்தார். அவரது தந்தையாரும் உழைப்பில் சளைத்தவரல்லர்.

மான்ஸ்பெல்ட் நகரத்துச் செப்புச் சுரங்கத்தில் ஒரு சாதாரண தொழிலாளராக அமர்ந்த ஹன்ஸ் லுத்தர் தமது ஊக்கமிக்க உண்மையுள்ள உழைப்பால் உயர்ந்து, சில காலத்திற்குப்பின் தாமே வெட்டிய ஒரு சுரங்கத்தின் பங்காளியானதுமன்றி, பின்னர் அச்சுரங்கத்தின் அதிகாரியுமானார். தமது சுறுசுறுப்பினாலும் சிக்கனத்தினாலும் சிறிது செல்வம் திரட்டி, தமது குடும்பத்தார் வசிக்க ஒரு நல்ல வீடும் கட்டிக் கொண்டார். சலியா உழைப்பிலும், நல்லொழுக்கத்திலும், தெய்வ பக்தியிலும் செழித்து வந்த ஹன்ஸ் லுத்தரை அந் நகரத்தார் நன்கு மதிக்கத் தலைப்பட்டனர். லுத்தர் புகழ்

நகரெங்கும் பரவியது. 1491-ஆம் ஆண்டில் மான்ஸ்பெல்ட் நகராண்மைக் கழகத்தில் அங்கம் வகிக்க ஹன்ஸ் லூத்தர் தேர்ந்தெடுக்கப்பட்டார். தமது வீட்டுக்கு மட்டுமன்றி நாட்டிற்கும் நகரத்திற்கும் சேவை செய்வதில் முனைந்து நின்றார் ஹன்ஸ் லூத்தர். பணி செய்து கிடப்பதையே தம் கடனாகக் கொண்டார் அவர்! தொண்டு செய்து மகிழ் கொண்டார் அவர்! லூத்தரின் சேவையை அந்நகரத்தார் பெரிதும் பாராட்டி வந்தனர்.

பலாப்பழத்தை ஈ மொய்ப்பதுபோன்று ஹன்ஸ் லூத்தரை அந்நகர அறிஞர்கள் சூழ்ந்துகொள்ள ஆரம்பித்தனர். காரணம், லூத்தருக்குக் கல்வியறிவு என்றால் அதிக ஆர்வம். ஓய்வு நேரங்களிலெல்லாம் நல்ல நூல்களைக் கற்றுத் தமதறிவைப் பெருக்கி வந்தார். ''பல கற்க பண்டிதன் ஆவான்'' என்ற ஆன்றோர் மொழிக்கேற்ப லூத்தர் பல நூல் களைக் கற்றுப் பேரறிஞராகத் திகழ்ந்தார். ''இனம் இனத் தோடு, வெள்ளாடு தன்னோடு'' என்ற முதுமொழிப்படி அந் நகரத்துக் கல்வி மேதைகளெல்லாம் லூத்தரை அடுத்து நெருங்கிப் பழகி வருவாராயினர். அந்நகரத்திலுள்ள குரு மாரும் பள்ளி ஆசிரியரும் பேரறிஞரும் அடிக்கடி லூத்தரது இல்லம் வந்து லூத்தரோடு உண்டு உரையாடி வந்தனர். இளைஞரான மார்ட்டின் லூத்தர் அவ்வறிவு கொழிக்கும் அரிய உரையாடல்களையெல்லாம் ஆவலோடு கூர்ந்து கவனித்து வருவதுண்டு. ''கற்றலிற் கேட்டலே நன்று!'' என்றார்போல, இளைஞர் மார்ட்டின் லூத்தர் இளமை யிலிருந்தே வல்லார் வாய் அறிவுச் செல்வத்தைக் கேட்டுப் பெருக்கி வந்தார். ''செல்வத்துச் செல்வம் செவிச் செல்வம்'' அல்லவா! ''தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்'' என்ற மூதுரைக்கேற்ப, கல்வி கேள்விகளில் மார்ட்டின் லூத்தருக்கு இளமையிலேயே இருந்த ஆர்வம் வாழ்க்கை இறுதிவரை வளர்ந்து முதிர்ந்து வந்ததெனலாம்.

''இளமையிற் கல்?'' என்றார்போல, தனது மகன் இளமையிலிருந்தே கற்று இணைவற்ற கலைஞனாக வேண்டு

மென்பது லூத்தரின் எண்ணம். எனவே, மார்ட்டின் லூத்தர் ஏழாவது வயதாயிருக்கும்பொழுதே மன்ஸ்பெல்டிலுள்ள ஒரு தொடக்கப் பள்ளியில் சேர்க்கப்பட்டார். அப்பள்ளியில் மூன்று வகுப்புகளிலிருந்தன. ஒவ்வொரு வகுப்பிலும் மாணவர் பல ஆண்டுகள் பயிற்சி பெறவேண்டும். எழுத்து, வாசகம், கணிதம், இலத்தீன்மொழி போன்ற பாடங்களில் மாணவர்க்கு ஆரம்ப பயிற்சி அப்பள்ளியில் அளிக்கப்பட்டு வந்தது. அக் காலத்தில் அச்சுப் புத்தகங்கள் வெகு அபூர்வமாயிருந்த காரணத்தால் மாணவர் எல்லாப் பாடங்களையும் மனப் பாடம் செய்யவேண்டியதிருந்தது. முதல் வகுப்பில் மட்டுமே மாணவர் தாய்மொழியில் உரையாட அனுமதிக்கப் பெற்ற னர். மேல் வகுப்புகளில் எல்லா மாணவரும் இலத்தீன் மொழியில்தான் பேசவேண்டும். இப்பள்ளிச் சட்டத்தை மீறும் பிள்ளைகளுக்குத் தண்டனை அளிக்கப்படும். பள்ளியில் வேதபாட பயிற்சி இருந்ததில்லை. ஆலய ஆராதனைகளில் ஞானப்பாட்டுக்கள் பாடுவதற்காக மாணவர் அடிக்கடி ஆலயம் செல்வதுண்டு. ஆலய ஆராதனை நேரந்தான் ஆசிரியருக்கும் மாணவருக்கும் கிடைக்கும் ஓய்வு நேரம். இத்தகைய இசைப் பயிற்சி மார்ட்டின் லூத்தரது இயற்கை இசை ஞானத்தைப் பன்மடங்கு பெருகச் செய்தது.

பள்ளிக்கூடம் காலை ஐந்தரை மணிக்கு ஆரம்பமாகி விடும். தாமதித்து வரும் மாணவர் தண்டனைக்குத் தப்பார். எல்லாருக்கும் கடைசியாய்ப் பிந்தி வருகிற மாணவன் தண்டனையாக மரக்கழுதை ஒன்றைச் சுமந்துகொண்டு திரிய வேண்டும். இலத்தீன் மொழியில் பேசத் தவறியவர்களையும் பிற குற்றம் இழைப்பவர்களையும் சட்டாம்பிள்ளை தனது குறிப்புப் பலகையில் பொறித்துக்கொள்ள மறக்கவே மாட் டான். வார இறுதியில் இக்குறிப்புப் பலகையில் இடம் பெற்றோர் பிரம்படி பெறுவார். ஒருநாள் நண்பகலுக்குள் மார்ட்டின் பதினைந்து முறை பிரம்படி பெற்றார். அக்காலத் தில் கல்விச்சாலையில் அதிகக் கண்டிப்பும் கட்டுப்பாடும் இருந்து வந்தது. இளக்காரம் கொடுத்தோ அல்லது

செல்லம் அளித்தோ பிள்ளைகளைச் சீர்குலையச் செய்வது இக்காலப் பழக்கமேயன்றி அக்காலப் பழக்கமன்று. பள்ளியில் மட்டுமன்றி, வீட்டிலும் பிள்ளைகள் வெகுக்கண்டிப்பாகவே வளர்க்கப்பட்டனர். தங்கள் பிள்ளைகள் பிற்காலத்தில் நல்லொழுக்கமும், நல்லறிவும் படைத்த நன்மக்களாகத் திகழ வேண்டுமென்பது அக்காலத்தவர் கருத்து; ''பிள்ளையை தண்டியாமல் விடாதே; அவனைப் பிரம்பினால் அடித்தால் அவன் சாகான், நீ பிரம்பினால் அவனை அடிக்கிறதனால் பாதாளத்துக்கு அவன் ஆத்துமாவைத் தப்புவிப்பாயே'' (நீதி, 23:13,14) என்று சாலமோன் ஞானியார் மொழிந்துள்ள நீதிமொழிகளைப் பின்பற்றி வந்தனர். இக்கண்டிப்பு முறைப்படி இளைஞனாகப் பிரம்படி தண்டனை பெற்றுள்ள மார்ட்டின் லூத்தர் பிற்காலத்தில் இவ்வாறு தமது அபிப்பிராயத்தைத் தெரிவித்துள்ளார். ''கர்த்தருக்கேற்ற சிட்சையிலும் போதனையிலும் பெற்றோர் தங்கள் பிள்ளைகளை வளர்க்கவேண்டும், கிறிஸ்தவ அன்பைப் பிள்ளைகள் தங்கள் பெற்றோரில் கண்டுகொள்ளும் வண்ணம் பெற்றோர் தங்கள் பிள்ளைகள்பால் அன்பாயிருக்க வேண்டும். பிள்ளைகள் குற்றம் செய்யுங்கால் தண்டியாமல் கண்சாடையாய் விட்டு விடுவது கிறிஸ்தவ அன்பு அன்று.''

திருச்சபை சீரமைப்புக்கு முன்னர் ஜெர்மனியில் கிறிஸ்தவ குடும்ப பக்திநெறி எவ்வாறு இருந்தது என்பதுபற்றி பயன் மிக்க சுவையான செய்திகளை லிண்டுசே ஆசிரியர் வெளியிட்டுள்ளார். அநேகமாக எல்லா இல்லங்களிலும் எளிய சன்மார்க்க பக்திநெறி நிலவி வந்ததாக அவர் குறிப்பிட்டு உள்ளார். லூத்தர் அம்மையார் சிறந்த கிறிஸ்தவ பக்தியும் சீரிய சன்மார்க்க நெறியும், அருங்குண சீலமும் படைத்த பெண்மணி என்று மிலாங்தோன் பாராட்டிக் கூறியுள்ளார். லூத்தரும் தெய்வ பக்தி மிக்கவர், நேர்மையாளர், நல்லொழுக்க சீலர். லூத்தர் குடும்பத்தினர் ஜெப சிந்தை படைத்தவர்கள். எனவே மார்ட்டின் லூத்தர் சிசுவிலிருந்தே ஜெப பக்தியுடையவராக வளர்க்கப்பட்டார். குடும்ப ஜெபமில்லாமல் அவர்கள் நித்திரைக்குச் செல்வதில்லை. காலை

வேளையும் ஜெபத்துடன் ஆரம்பமாகும். சின்னஞ்சிறுவராக இருக்கும்பொழுதே மார்ட்டின் லூத்தர் கர்த்தருடைய ஜெபம், விசுவாசப்பிரமாணம், பத்து கற்பனைகள் போன்றவற்றை மனப்பாடம் செய்துகொள்ளக் கற்பிக்கப்பட்டார்.

அக்காலத்துச் சுரங்கத் தொழிலாளர் பெரும்செல்வராகத் திகழக்கருதி, பரிசுத்த ஆன் (St. Anne) அம்மையாரைத் தங்கள் குலதெய்வமாக வணங்கி வந்தார்கள். சுரங்கத் தொழிலில் ஈடுபட்டிருந்த லூத்தர் குடும்பத்தினரும் புனித ஆன் அம்மையாரையே குலதெய்வம்போல வழிபட்டு வந்தனர். அது மட்டுமின்றி, சிலுவை மரத்துண்டுகள், இரத்தச்சாட்சிகளின் எலும்புத் துண்டுகள், பரிசுத்தவான்களின் ஆடை துண்டுகள், உரோமம், இரத்தச்சாட்சிகள் கொலை செய்யப்பட்ட ஈட்டி முனைகள், ஆணித் துண்டுகள் போன்றவற்றை பரிசுத்தப் பண்டங்களாகக் கருதி அவற்றை வணங்கியும் வந்தனர். இப்பரிசுத்தப் பண்டங்களைத் தங்களுக்கென்று சொந்தமாகச் சம்பாதித்துக்கொள்ள அக்கால மக்கள் ஆவலோடு நாடெல்லாம் அலைந்து திரிந்தனர். ஏனெனில் அவைகளால் வியாதிகளும், ஆபத்துகளும், விபத்துகளும் நீங்குமென்றும், பாவ ஆத்துமாக்களுக்கு இரட்சிப்பு கிட்டுமென்றும், அநேக அற்புதங்கள் நிகழும் என்றும் எண்ணியிருந்தனர்.

இத்தகைய அவபக்தி நெறியால் கடவுளுக்கும் மனிதனுக்குமிடையே அநேகக் குருட்டுப் பழக்கங்கள் குறுக்கிட்டு கடவுளின் திருமுகத்தை மறைத்து நின்றன. ஒரு மைந்தன் தனதருமை அன்புத் தந்தையிலும் மேலான தெய்வத்திடம் முகமுகமாய் நேரில் சென்று உறவாட முடியவில்லை. அவன் தனது கருணைக் கடவுளைக் கண்டடைந்து ஆன்ம ஈடேற்றம் பெற அநேக மத்தியஸ்தர்களை உபயோகிக்க வேண்டியதாயிருந்தது. அதற்காகப் பரிசுத்த கன்னிமரியம்மாளையும், பிற பரிசுத்தவான்களையும், போப்புவையும், குருக்களையும், பரிசுத்த பண்டங்களையும், ஏழு சாக்கிரமந்துகளையும், போப்புவானவர் விதிக்கும் புனித நியமங்களையும், பாவ மன்னிப்புச் சீட்டுகளையும் உறுதுணையாக கொண்டார்கள்.

ஒரு தனி கிறிஸ்தவனுக்கும் கிறிஸ்துவுக்குமிடையில் திருச்சபையும் அதன் சட்டங்களும் ஆசாரங்களும் தடுப்புச் சுவர் போலிருந்தன.

சாதாரண சபையார் கிறிஸ்துவை நேரிடையாகக் கிட்டிச் சேரவிடாதபடிக்கு இடையே எத்தனையோ முட்டுக்கட்டைகள் போடப்பட்டிருந்தன. போப்புவின் வாக்கே தெய்வ வாக்குபோல போதிக்கப்பட்டு வந்த காரணத்தால், மனிதன் தெய்வ வாக்கைத் தேவனுடைய வசனமாகிய பரிசுத்த வேதாகமத்திலிருந்து நேரிடையாக அறிந்தொழுக உரிமையில்லாது போய்விட்டது. கடவுள் சினமிக்கவராயும் கொடூர நீதிபதியாயும், போப்பு அல்லது பரிசுத்தவான்கள்மூலமாகச் சாந்திப் பண்ணப்படவேண்டியவராகவுமே கருதப்பட்டார்.

தனது பள்ளிக்கூடத்து ஆசிரியர் மட்டுமின்றி, பரலோகத்துத் தெய்வமும் அதிகக் கண்டிப்போடு தண்டனை அளிக்கும் நியாயாதிபதியே என்ற அபிப்பிராயம் இளைஞனான மார்ட்டின் பிஞ்சுள்ளத்தில் சூழ்நிலை காரணமாகப் பதிந்திருந்தது. இளம் பருவத்தில் கிறிஸ்துவின் பெயரைக் கேட்டவுடனே தாம் நடுங்கிப் பயந்துள்ளதைப்பற்றிப் பிற்காலத்தில் மார்ட்டின் லூத்தர் தாமே கூறியிருக்கிறார். அக்காலத்தில் மார்ட்டின் லூத்தருக்குக் கடவுளைப்பற்றி ஒரு பயங்கரத் திகில் இருந்ததாகப் பின்னர் தெரிவித்துள்ளார். தேவ கோபாக்கினைக்குப் பயந்து அதற்குச் சாந்தி செய்ய அநேகப் புண்ணியக் கிரியைகளைச் செய்யத் தூண்டப்பட்டார். இவ்வாறு அக்காலப் போப்புமார்க்கச் சூழ்நிலை மார்ட்டின் இளைஞனை மூடப்பக்திக்குப் பலியாக்கியிருந்தது.

ஹன்ஸ் லூத்தர் தமது மைந்தனைப் பேரறிஞனாக்கப் பெரிதும் விழைந்தார். எனவே மார்ட்டின் லூத்தர் தமது பதினான்காம் வயதில் மேல் படிப்புக்காக மன்ஸ்பெல்டை விட்டு, மக்டெபர்க் (Magdeburg) என்னும் பெரிய பட்டணத்திற்கு அனுப்பப்பட்டார். இந்நகரிலே அலங்காரமான ஆலயங்களையும், ஆராதனைச் சிறப்புகளையும் கண்டு பிரமித்து நின்றார் மார்ட்டின் லூத்தர். இப்பட்டணத்தில் பொதுநிலை

நண்பர் நடத்திவந்த பள்ளியில் மார்ட்டின் லூத்தர் ஓராண்டு காலம் கல்வி பயின்று வந்தார். பொதுநிலை நண்பரெவரும் அவரது அகத்தைக் கவர்ந்துகொள்ள முடியவில்லை. ஆனால் அவர் அந்நகர்தனில் கண்டதோர் அரிய காட்சி அவரது இதயத்தைத் தொட்டுவிட்டது. அன்கால்ட் பெர்ன்பர்க் என்ற நாட்டைச் சேர்ந்த வில்லியம் இளவரசன் பிரான்சிஸ் கன் துறவியாய் அப்பட்டணத்தில் தங்கியிருந்தார். முப்பத்தைந்து ஆண்டுகட்குப் பின்னர், மார்ட்டின் லூத்தர் அந்த வில்லியம் இளங்கோவடிகளைப்பற்றி பின்வருமாறு உள்ளம் உருக உரைத்துள்ளார். ''என் சொந்த கண்களால் அந்த வில்லியம் இளங்கோவடிகள் வெறுங்காலால் நடந்து தெருத் தெருவாய்ச் சென்று பிச்சையெடுத்து, புனிதத் தியாக வாழ்க்கையாற்றக் கண்டேன்.'' வில்லியம் இளவரசர் கடுந் தவத்தினால் உடல் மெலிந்து எலும்பும் தோலுமாகிக் கூனிப் போயிருந்தார். அவர் தனக்குப் பின்னாலிருந்து தன்னைச் சவுக்கினால் அடித்துக்கொண்டேயிருக்க இன்னொருவனைப் பணித்திருந்தார். இப்பரிதாபமான காட்சி இளைஞன் லூத்தரின் உள்ளத்தை உலுக்கிவிட்டது. இந்த உருக்கமான காட்சி மார்ட்டின் லூத்தரின் மரண பரியந்தம் அவரது மனத்தில் ஆழ்ந்து பதிந்திருந்தது. சுவர்க்கம் அடைய சன்னியாச மார்க்கமே சாலச் சிறந்தது என்ற முடிவுக்கு வந்தார் மாணவரான மார்ட்டின் லூத்தர். மக்டெபர்க் நகர்தனில் மேலும் சில காலம் இருந்திருப்பின் மார்ட்டின் அங்குத் தானே சந்நியாச வாழ்க்கையை மேற்கொண்டிருப்பார். ஆனால் அவருடைய தந்தையார் தன் மைந்தன் ஒரு மேன்மைமிக்க அரசாங்க அதிகாரியாகவேண்டும் என்ற எண்ணம் கொண்டவராய், மேற்படிப்புக்காக தனது பிறந்தகமாகிய துரிக்கிய நாட்டின் கோநகராகிய ஐசனாக் (Eisenach) மாநகருக்கு மார்ட்டின் லூத்தரை அனுப்பினார். ஐசனாக்கின் இயற்கை வனப்பு மார்ட்டின் உள்ளத்தைக் கொள்ளைக் கொண்டது. ஐசனாக்கின் அருகேயுள்ள கவின்மிக்க காடுகளும், எழில் கொழிக்கும் மலைகளும், மணம் கமழும் மலர்ச்செடிகளும் மார்ட்டின் மனத்தை அள்ளிக்கொண்டன.

ஓய்வு கிடைக்கும் பொழுதெல்லாம் மார்ட்டின் லூத்தர் ஓடோடிச் சென்று இவ்வியற்கை அழகினை அள்ளிப் பருகு வார். இயற்கை வனப்பில் இளைஞன் மார்ட்டின் ஆழ்ந்து மூழ்கித் திளைத்து நிற்பார்.

ஐசனாக்குக்கு அண்மையிலுள்ள வர்ட்பர்க் (Wartburg) என்னும் கோட்டை இவரது முன்னாள் மனக்கோட்டையை மீண்டும் நினைவுபடுத்தி நின்றது. காரணம் இந்த வர்ட்பர்க் கோட்டைக்கருகில் தமது உறவினரில் சிலர் ஒரு சந்நியாச மடத்தை ஆதரித்து நடத்தி வருகிறார்கள் என்று அவர் அறிந்தபோது, தாம் சந்நியாசம் கொள்ளவேண்டுமென்று முன்னர் கொண்டிருந்த எண்ணம் மீண்டும் தலையெடுத்து நின்றது.

மார்ட்டின் லூத்தரின் பிஞ்சுள்ளத்தைக் கவ்விக்கொண்ட இன்னொரு காட்சியுண்டு. அது திருச்சபையை ஒரு கப்பலாக உவமித்துப் தீட்டப்பட்டுள்ள சித்திரமாகும். பரிசுத்தாவி யானவரே திருச்சபைக் கப்பலின் மாலுமியாவார். போப்பான வர், அத்தியட்சர்மார், குருமார், துறவிகள் அக்கப்பலில் பிரயாணம் செய்து மோட்சக் கரை நோக்கிச் செல்லுகிறவர் கள். சாமியார் அல்லாதார்க்கு அக்கப்பலில் இடமில்லை. அவர்கள் பாவப் பெருங்கடல் நீரில் தத்தளித்துத் தவிக்கின்ற னர். தப்பித்துப் பிழைக்க அவர்களுக்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. கப்பலிலிருந்து கீழே தொங்க விடப்பட்டிருக்கும் இரட்சணியக் கயிற்று முடிச்சுகளை விடாப்பிடியாய் பிடித்து நிற்கவேண்டும். சாதாரணச் சபையாரைவிடச் சாமிமார் எவ்வளவு பத்திரமாய்க் கப்பலில் இடம் பெற்றுள்ளார்கள்! எனவே, சாதாரண கிறிஸ்தவரைவிடச் சாமிமார் அதிகப் பாக்கியம் படைத்தவராவர். மோட்சம் சேருவதற்குச் சாமியாராவதே சாலச் சிறந்த வழி என்று மார்ட்டின் லூத்தர் மனதில் தென்பட்டது. தாமும் சாமியாராக வேண்டும் என்ற எண்ணம் இவ்வாறு வலுவடைந்து கொண்டே வந்தது.

2

உழைத்து ஊதியம் பெற்றுப் பல்கலைக் கழகத்தில் பல கலைகளும் கற்றுத்தேர்ந்து பட்டம் பெறுவது அக்காலத்து ஜெர்மன் மாணவர் வழக்கம். மார்ட்டின் லூத்தர் இசைக் கருவிகள் இசைப்பதிலும், பாட்டுப் பாடுவதிலும் சிறந்த வரம் படைத்தவராகத் திகழ்ந்தமையின், அவருடைய பாட்டைக் கேட்டுப் பலர் பரவசமுற்று அவருக்கு நன்கொடைகள் அளிப்பதுண்டு. இவ்வாறு மார்ட்டின் லூத்தர் தமது இசை வரத்தால் பெற்றுவந்த பொருள் உதவியைக் கொண்டு பல்கலைக் கழகப் படிப்பைத் தொடர்ந்து படித்து முன்னேறி வந்தார். அவருக்குக் கல்வியில் அதிக ஆர்வம் உண்டு. ஒரு தடவை அவருக்குப் போதிய நிதியில்லாக் காரணத்தால் வாடி வதங்க நேரிட்டது. தனது வழக்கப்படி தெருவில் சென்று இனிய கீதங்களை மதுரமாக தேன் ஒழுக இசைத்துச் சென்றார், மூன்று வீடுகளில் அதற்குத் தக்க வரவேற்பும், ஆதரவும், பொருளுதவியும் கிடையாது போகவே, மார்ட்டின் லூத்தர் மனம் சோர்ந்தார். என்ன செய்வதென்று அறியாது நான்காவது வீட்டின்முன் மனம் தளர்ந்து நின்றார். போதிய பொருளுதவி உடனே கிட்டாவிட்டால், தனது பல்கலைக் கழகப் படிப்பைத் தொடர்ந்து படிக்க முடியாது போய் விடுமோவென்று மனம் பதறினார் மார்ட்டின் லூத்தர். இந்த இக்கட்டான நேரத்தில் மார்ட்டின் லூத்தர் கடவுளை நோக்கிப் பிரார்த்தித்தார்.

ஆபத்துக் காலத்தில் என்னை நோக்கிக் கூப்பிடு; நான் உன்னை விடுவிப்பேன், நீ என்னை மகிமைப்படுத்துவாய்'' (சங். 50:15) என்பது தெய்வத்தின் திருவாக்கல்லவா! கர்த்தர் மாட்டின் லூத்தருக்கு உடனே உதவி செய்தருள எழுந்தருளினார். மார்ட்டின் லூத்தர் நான்காவது வீட்டின் முன் நின்றபடியே உள்ளம் உருகப் பாட ஆரம்பித்தார். அவரது இசை அமுதம் இன்ப வெள்ளம்போல புரண்டு அவ் வீட்டுக்குள் வழிந்தோடியது, வீட்டுக்குள்ளிருந்த உர்சுலா (Ursula) என்ற இசையுள்ளம் படைத்த பெண்மணி அந்த இசை அமுத வெள்ளத்தில் ஆழ்ந்துபோனாள். இத்தகைய

தேனிசை இசைக்கும் ஒருவன் என் மகனாக அமைந்து விட்டால் நான் பெறும்பேறு பெற்றவளாவேன் என்று பொங்கியெழுந்தாள்; கதவைத் திறந்தாள்; இசை மன்னன் மார்ட்டின் லூத்தரைக் கண்டாள்; அவரைத் தன் ஞான மகனாக வரவேற்றாள்; மார்ட்டினது இடுக்கண் நிலை கண்டாள்; அந்நகரில் கல்விகற்கும் வரையில் தனது வீட்டிலிருந்து உணவருந்திப் படித்து வருமாறு மார்ட்டின் லூத்தரை வேண்டிக்கொண்டாள். கர்த்தருடைய அளவற்ற கிருபையால் மார்ட்டினுக்கு ஒரு நல்ல வளர்ப்புத் தாய் கிடைத்து விட்டாள்! உர்சுலாவுக்கு ஒரு ஞான மகன் கிடைத்து விட்டான்! உர்சுலாவின் கணவனான கான்ரேட் கோட்டா (Conrad cotta) என்னும் உத்தமன் தனது மனைவியைப் பெரிதும் பாராட்டி, மார்ட்டின் லூத்தரை அந்நகரிலிருக்கும் வரை தன் சொந்த மகன்போல தன் வீட்டில் வைத்துப் பராமரித்தார். அக்கிறிஸ்தவ வீட்டில் பக்தியும், அன்பும், பண்பும் நிலவின. அக்கிறிஸ்தவ அன்புச் சூழ்நிலையில் மார்ட்டின் லூத்தர் நன்கு படித்து, பல கலைகளில் நிபுணராகத் திகழ்ந்தார். கல்லூரிப் பேராசிரியர்களும் உடன் மாணவர்களும் அவரைப் பெரிதும் பாராட்டி வந்தனர். இலத்தீன் மொழிப் பயிற்சியிலும், காவியக் கலையிலும், பேச்சு வன்மையிலும், இசை ஞானத்திலும் அவருக்கு நிகர் அக்கல்லூரியில் எவருமிலர் என்றே கூறவேண்டும்.

உர்சுலா தாயாருக்கு ஏற்ற அன்பு மைந்தனாக அமைந்தார் மார்ட்டின் லூத்தர்! ஓய்வு நேரங்களிலெல்லாம் மார்ட்டின் மைந்தனைப் பாட்டு பாடச்சொல்லி அதைக் கேட்டு ரசிப்பது உர்சுலாவின் வழக்கம். தன்னை இவ்வளவு பட்சமுடன் நடத்திய தனது ஞானத் தாயை மார்ட்டின் லூத்தர் தனது வாழ்க்கையில் ஒருகாலும் மறந்ததில்லை. வாழ்க்கை முழுவதும் அத்தாயாரிடம் நன்றியோடு பணிந்த சிந்தையுடையவராகக் கீழ்ப்படிதலுடன் நடந்துகொண்டார் மார்ட்டின் லூத்தர். பின்னொரு காலத்தில் மார்ட்டின் லூத்தர் தனது அருள்மிக்க தாயாராகிய உர்சுலாவை நினைத்து,

''கிறிஸ்தவ பக்திக்கொழிக்கும் ஒரு புனித அன்புத் தாயுள்ளம் படைத்த ஒரு பாக்கியவதி இப்பாருலகில் கிடைத்தற்கரிய நிகரற்ற பாக்கியமாகும்'' என்று புகழ்ந்துரைத்துள்ளார்.

மார்ட்டின் லுத்தர் இக்கிறிஸ்தவ அன்பு இல்லத்தில் மன நிம்மதியோடும், மகிழ்ச்சியோடும் ஐந்தாண்டுகள் தங்கிக் கல்வி கற்றார். இந்த ஐந்தாண்டுக் காலம் மார்ட்டின் வாழ்க்கையில் ஒரு பொற்காலமென்றே சொல்லவேண்டும். கல்வி மணம் காணாத ஒரு சாதாரண மனிதனால் அக்காலத்தில் நிலவியிருந்த கடுமையான மூடப் பழக்கங்களை எதிர்த்து போராடியிருக்க முடியாது. கலை மன்னர்களையும், புவி மன்னர்களையும், போப்பரசரையும் எதிர்த்து நின்று போராடி வெற்றி காண்பதற்கு ஒரு சிறந்த அறிவுமிக்க மாபெரும் மலை வேந்தன் வேண்டும். மார்ட்டின் லுத்தரை இச்சீர்திருத்தத் திருப்பணிக்கு கர்ப்பத்திலிருந்தே தெரிந்துகொண்ட கர்த்தர் அவரைச் சிறந்த கல்வி மேதையுமாக்கச் சித்தங்கொண்டார்!

எபிரெயரை விடுதலை செய்வதற்குக் கர்த்தர் தெரிந்து கொண்ட கருவியாகிய மோசேயைப் பார்வோன் அரண் மனைக்கனுப்பிச் சகல கலைகளிலும் வல்லவனாக்கினார். புற ஜாதிகளுக்கும் இராஜாக்களுக்கும் முன்பாகத் தமது திருநாமத்தை அறிவிப்பதற்காகத் தாம் தெரிந்துகொண்ட பாத்திரமாகிய பவுலை ஆண்டவர் கமாலியேல் கலைஞன் மூலமாக மாசிறந்த கலைஞனாக்கினார். அவ்வாறே பதினாறாம் நூற்றாண்டில் சர்வாதிகாரம் படைத்திருந்த போப்பரசரை எதிர்த்து நின்று திருச்சபையைச் சீர்திருத்தியமைக்க ஆண்டவர் தெரிந்துகொண்ட பாத்திரமாகிய மார்ட்டின் லுத்தரை அக்காலத்தில் அந்நாட்டில் தலைசிறந்து விளங்கிய பல்கலைக் கழகங்களில் படிக்கவைத்து, அவரை ஈடு இணையற்ற கல்வி மேதையாக்கிவிட்டார்!

கர்த்தாவே உமது வழிகள் ஞானமும் ஆச்சரியமுமானவை! உமக்கே கனமும் மகிமையும் உண்டாவதாக!

# 3

# வாலிபரான மார்ட்டின் லுத்தர்

''இவைகள் பேதைகளுக்கு வினாவையும், வாலிபருக்கு அறிவையும், விவேகத்தையும் கொடுக்கும்.''

''கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்தின் ஆரம்பம்'' (நீதி. 1:4—7).

''உங்களில் ஒருவன் ஞானத்தில் குறைவுள்ளவனாயிருந்தால், யாவருக்கும் சம்பூரணமாய்க் கொடுக்கிறவரும் ஒருவரையும் கடிந்து கொள்ளாதவருமாகிய தேவனிடத்தில் கேட்கக்கடவன், அப்பொழுது அவனுக்குக் கொடுக்கப்படும்.'' (யாக். 1:5).

''நீ உன் வாலிபப் பிராயத்திலே உன் சிருஷ்டிகரை நினை'' (பிர. 12:1).

மார்ட்டின் லுத்தர் இப்பொழுது பதினெட்டு வயது பிராயமுடைய சிறந்த வாலிபனாகத் திகழ்ந்தார். மேலும் அறிவைப் பெருக்கிக்கொள்ள வேண்டுமென்ற ஆசை அவரது அகத்தில் பொங்கி எழுந்தது. அவருடைய தந்தையார் தன் மைந்தன் சிறந்த வழக்கறிஞனாகத் திகழவேண்டுமென்று விழைந்தார். எனவே, மார்ட்டின் லுத்தர் அக்காலத்தில் பெரும் புகழ் பெற்றிருந்த எர்பர்ட் (Erfurt) பல்கலைக் கழகத்தில் பயில்வதற்காக 1501-ஆம் ஆண்டில் அனுப்பப்பட்டார். அக்காலச் சர்வகலாசாலைக் கல்வியானது மாணவரை நீதிமன்ற சேவைக்கும், திருச்சபைத் திருத்தொண்டிற்கும் ஒன்றுபோல பயிற்றுவிக்கத்தக்கதாயிருந்தது. தத்துவ இயலும் இறையியலும் ஒன்றொடோன்று தொடர்புடையதாகக் கற்பிக்கப்பட்டன. அதிநுட்பமாகச் சட்டக்

கலையில் ஈடுபடுமுன், முதல் ஐந்தாண்டுகள் இலத்தீன், இலக்கியம், தத்துவக்கலை, இறையியல், சமயக்கலை போன்ற கலைகளைக் கருத்தூன்றிக் கற்க வேண்டியதாயிருந்தது. மார்ட்டின் லூத்தர் இக்கலைகளில் முழுக்க முழுக்க மூழ்கி விடுவது வழக்கம். பல்கலைக்கழகம் முழுவதும் மார்ட்டின் லூத்தரின் அறிவுத்திறனை வியந்து பாராட்டியது. அப் பல்கலைக் கழக நூல் நிலையத்தில் மார்ட்டின் லூத்தர் தனது ஓய்வு நேரத்தையெல்லாம் கழித்து, நூல்களைப் புரட்டி, ஏடுகளை அலசி ஆராய்ச்சியில் ஆழ்ந்துவிடுவார். நேரத்தை அவர் வீணாகக் கழித்தறியார். இவ்வாறு அல்லும் பகலும் அயராது உழைக்கும் பழக்கத்தை அவர் தமது பெற்றோரிட மிருந்து கற்றிருந்தார். ''தொட்டனைத்தூறும் மணற்கேணி, மாந்தார்க்குக் கற்றனைத்தூறும் அறிவு'' என்றபடி மார்ட்டின் லூத்தர் பல பல நூல்களைக் கற்றுத் தம் அறிவு வளத்தை அதிகமதிகமாய்ப் பெருக்கிக்கொண்டே வந்தார்.

ஒரு நாள் இவ்வாறு மார்ட்டின் லூத்தர் பல்வேறு நூல் களைப் புரட்டிக்கொண்டிருக்குங்கால், ஓர் அபூர்வ புத்தகம் அவர் கண்ணுக்குத் தென்பட்டது. ஆச்சரியத்தோடு அப் புத்தகத்தைத் தூக்கி எடுத்துப் படித்துப் பார்த்தார். அதன் தலைப்பை மீண்டும் வியப்போடு கூர்ந்து வாசித்தார். பரிசுத்த வேதாகமம்! ஆம் அக்காலத்தில் அப்புத்தகம் அபூர்வமா னதே! கிடைத்தற்கரிய இப்பேரின்பக் கருவூலத்தை எதிர் பாராவண்ணம் நூல்நிலையத்தில் பெற்றதும் மார்ட்டின் லூத்தர் சிறிதுநேரம் மெய்மறந்து நின்றார்! பின்பு அதனைப் பயபக்தியோடு திறந்து படித்துப் பார்த்தார், அன்னாள், சாமுவேல் சம்பவம் கண்ணில் தென்பட்டது. அன்னாள், சாமுவேலின் ஜெபமும், பக்தி வைராக்கியமும் மார்ட்டின் லூத்தரின் இதயத்தை உருக்கிவிட்டன. இக்காட்சியை அவர் வாழ்க்கையில் ஒருக்காலும் மறந்ததில்லை. அன்னாள் அழுகை யோடு ஜெபித்து ஆண்டவரைக் கெஞ்சி நிற்கும் காட்சியும், கர்த்தர் சிறுவனான சாமுவேலிடம் பேச விரும்பின நிகழ்ச்சி யும், இளைஞனான சாமுவேல்: ''கர்த்தாவே சொல்லும்

அடியேன் கேட்கிறேன்'' என்று சொன்ன சம்பவமும், மார்ட்டின் லுத்தரின் மனதில் பசுமரத்தாணிபோல பதிந்து விட்டன. இக்காட்சி மார்ட்டின் லுத்தரை ஒரு ஜெப மாந்தனாக்கிவிட்டது. அதிலிருந்து அவரது கல்லூரி வாழ்க்கை ஜெபம் பாதி, கல்வி பாதி என்றாயிற்று. கல்வி கற்கும் பாதி நேரத்தைவிட பிரார்த்தனை செய்யும் பாதி நேரமே தனக்கு அதிக பயனும் பாக்கியமும் இன்பமுமான நேரமாக இருந்த தாக அவர் குறிப்பிட்டுள்ளார். அவர் புதிதாகத் தோண்டி எடுத்துள்ள இப்புதையல் செல்வமாகிய பரிசுத்த வேதா கமத்தைத் தொடர்ந்து கருத்தூன்றிக் கற்று வந்தார். மற்றப் பாடங்களையும் ஓய்வு ஒழிவின்றி ஓயாது படித்து வரவே, அவருக்குச் சுகவீனம் ஏற்பட்டது. இந்த அலுப்பு நோய் அவருக்குக் கொடிய நோயாக வளர்ந்து அவருடைய உயிருக்கே உலை வைத்துவிடும் அளவுக்கு கொடுமையாகிவிட்டது. அவருடைய நண்பர்கள்எல்லாம மார்ட்டின் இந்நோயால் இறந்து போய் விடுவாரென்றுதான் நினைத்து அதிர்ச்சியுற்றார்கள். மரண பயம் மார்ட்டின் லுத்தரையும் பிடித்து ஆட்டியது. அவர் செத்துப்போய் விடுவார் என்றிருந்த நேரத்தில் ஒரு நரை முதுகிழவரான பக்தன் அவரைப் பார்க்க வந்திருந்தார். அப்பொழுது மார்ட்டின் லுத்தர் அம்முதியவரைப் பார்த்து, ''நான் இன்னும் சில நிமிடங்களுக்குள் மறுமைக்குள் பிர வேசித்து விடுவேன்'' என்று மனம் பதைத்துக் கூறினார். அப்பொழுது அந்த முதுமை பூத்த பக்தர் மார்ட்டினை நோக்கி, ''மார்ட்டின், எனதருமை வாலிபனே, பயப் படாதே; நீ இப்பொழுது சாகமாட்டாய், கடவுள் உன்னை ஒரு வல்லமையான மனிதனாக்குவார், நீ அநேகருக்கு ஆறுதலும் ஆசீர்வாதமுமாயிருப்பாய்'' என்று தீர்க்கதரிசனம் போல முன்னுரைத்து அவரை வாழ்த்தினார். அவ்வாக்கு அப்படியே பலித்துவிட்டது. மார்ட்டின் லுத்தர் சுகம் பெற்றார்; கலைகளைக் கற்பதில் மீண்டும் அதிக ஆர்வத் தோடு ஈடுபட்டார். ஜெபத்திலும், மார்க்க பக்தியிலும், கல்வி கேள்விகளிலும் அதிகமதிகமாய் செழித்துத் தழைத்து வந்தார்.

இப்பயங்கர வியாதியினின்று அற்புதச் சுகம் பெற்ற பின்னர் மார்ட்டின் லூத்தர் தனது பெற்றோரைப் பார்த்து விட்டு, சிறிது ஓய்வும் பெற்று வருமாறு தனது இல்லம் ஏகினார். வீடு நோக்கிப் பிரயாணம் செய்யும்போது, அக் கால வழக்கப்படி ஓர் உடைவாள் ஏந்திச் சென்றார். அந்த வாள் கைப்பிசகாகத் தவறி வீழ்ந்து அவரது நரம்பை வெட்டி வீழ்த்திவிட்டது. இரத்தம் பெருக்கெடுத்தோடியது அவரது தோழன் மருத்துவச் சிகிச்சை செய்வோரைச் சீக்கிரம் கொணர்வதற்காக, அவரைத் தன்னந்தனியே போட்டுவிட்டு ஓடிச் சென்றுவிட்டான். மார்ட்டின் லூத்தர் இரத்த ஒழுக்கின் வேகத்தைப் பார்த்து, தான் அதி சீக்கிரத் தில் மரித்துவிடுவது நிச்சயம் என்று பதறியவாறு, ''பரிசுத்த கன்னிமரியம்மாளே, என்னைக் காப்பாற்றி அருள்க'' என்று கதறினார். அப்பொழுது அவருக்குப் பரிசுத்தவான்களின் மத்தியஸ்தத்தால்தான் தனக்கு உபகாரம் கிடைக்கும் என்ற குருட்டு நம்பிக்கை இருந்தது. பின்னரே அவர் நம்பிக்கை இயேசு கிறிஸ்துவில் பலமாய் வேரூன்றியது. இயேசு கிறிஸ் துவைப்பற்றிய விசுவாசத்திற்கு நேராக அவர் படிப்படியாக வழிநடத்தப்பட்டுக் கொண்டே வந்தார்; ஆண்டவர் கிருபை யாக அவரை அந்த ஆபத்தினின்றும் தப்புவித்தார்.

மார்ட்டின் லூத்தருக்கு மரண பயத்தை நினைவுக்குக் கொணர்ந்த இன்னொரு நிகழ்ச்சியும் நிகழ்ந்தது. அவரது ஆத்ம நண்பனாகிய அலெக்ஸ் என்பவன் திடீரென்று கொல் லப்பட்டு இறந்தான். தனது உயிர்த் தோழன் இவ்வாறு எதிர்பாராவண்ணம் சடுதி மரணம் அடைந்ததைக் கண்ட மார்ட்டின் லூத்தர் கண்கலங்கித் தவித்தார். தனக்கும் இத்தகைய ஆபத்தான விபத்து நினையாத நேரத்தில் நேரிட்டு விட்டால், தன் கதி அதோகதியாகிவிடுமே என்று அகம் நைந்தார். மரணத்திற்குப்பின் நடக்கவிருக்கும் நியாயத் தீர்ப்பில் தனக்குக் கிடைக்கப்போகும் நரக ஆக்கினையை நினைத்து நினைத்து மனம் தத்தளித்தார். தனது தந்தையார் தன்னைச் சட்டக்கலை பயின்று வழக்கறிஞனாக வேண்டு

மென்று வற்புறுத்துகிறாரே, அதனால் நரக ஆக்கினையைத் தப்பமுடியுமோவென்று மனம்புழுங்கினார். இறை இயல்கற்று சாமியாராகி மடத்துறவியாக வாழ்ந்தால் மட்டுமே தனக்கு நரக ஆக்கினையினின்று தப்ப வாய்ப்புக் கிட்டுமென்று கருதினார். இதற்கிடையில் தனது கல்வியிலும் கவனம் செலுத்தி, சிறந்த கலைஞனாகத் திகழ்ந்தார். 1506-ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்வில் வெற்றிபெற்று, கல்வி மேதை என்பதற்கறிகுறியாக எம். ஏ. (M. A.) பட்டமும், தத்துவமேதை என்பதற்குச் சான்றாக தத்துவப் பண்டிதர் பட்டமும் (Doctor of Philosophy) பெற்றார். பின்னர் வழக்கறிஞன் ஆவதற்குச் சட்டக்கலையும் கற்று வந்தார். அக்கலையிலும் நிபுணனாகி உடன் மாணவராலும், பேராசிரியராலும் பெரிதும் பாராட்டப்பட்டார். அக்காலத்தில் எர்பர்ட் சர்வகலாசாலைக்கு நிகரான கலாசாலை அந்நாட்டிலே வேறொன்றும் இருந்ததில்லை. அத்தகைய நிகரற்ற எர்பர்ட் பல்கலைக் கழகத்தில் மார்ட்டின் லூத்தருக்கு நிகரான மாணவன் யாரும் இருந்ததில்லை. மார்ட்டின் கல்வியில் மாபெரும் மகத்தான முத்தாக மிளிர்ந்தார். அந்த இணையற்ற சர்வகலாசாலைக்கு மார்ட்டின் ஒரு மணிமகுடம்போல மின்னிப் பிரகாசித்தார். இச்சமயத்தில் இம்மாணவர் திலகத்தின் வாழ்க்கைக்குத்திருப்பம் அளிக்கக்கூடிய ஒரு மாபெரும் எதிர்பாராச் செயல் நிகழ்ந்தது. அந்நிகழ்ச்சி மார்ட்டின் லூத்தரின் வாழ்க்கைப் போக்கையே மாற்றியமைத்துவிட்டது. நீதிமன்ற சேவைக்குச் செல்ல வேண்டிய மார்ட்டின் லூத்தர் கிறிஸ்தவச் சேவைக்குச் செல்லத் தூண்டப்பட்டார். அவரது வாழ்க்கையில் குறுக்கிட்டு அவரைத் திடுக்கிடச் செய்த எதிர்பாராத அந்நிகழ்ச்சி இதுதான்.

மார்ட்டின் லூத்தர் மீண்டும் இல்லம் ஏகி, தன் பெற்றோரைப் பார்த்துவிட்டு எர்பர்ட் பல்கலைச் கழகத்திற்குத் திரும்பி வந்துகொண்டிருந்த வேளையில் திடீரென்று ஒரு பயங்கர இடிமின்னல் உண்டாகி, அந்த இடி அவருடைய காலண்டை விழுந்துவிடவே, மார்ட்டின் அதிர்ச்சியால்

நடுங்கி, முகங்குப்புற விழுந்து, தன்னையறியாமலே தனது குல தெய்வமாகிய பரிசுத்த ஆன் (St. Anne) அம்மையாரை நோக்கி, ''புனித ஆன் அம்மையாரே, என்னை இரட்சியும்; நான் சாமியார் ஆகிறேன்'' என்று அலறினார்: அழுது கெஞ்சினார். மரணம், கடைசி நியாயத்தீர்ப்பு, நித்திய நரக ஆக்கினையெல்லாம் அவர் கண்முன் பளிச்சிட்டன. இந்த நித்தியநரக ஆக்கினையினின்று தப்புவதற்கு, தான் சாமியாராவதுதான் சரியான வழி என்று அவர் மனதில் தேங்கிக் கிடந்த எண்ணம் இந்த ஆபத்து நேரத்தில் புத்துயிர் பெற்றுத் திடீரென வெளிவந்தது. தனது உயிரைத் தப்புவித்துக் கொள்வதற்குத் தனது குல தெய்வத்திடம் சட்டெனக் கூறிவிட்ட பிரதிக்கினையைப்பற்றி மார்ட்டின் லூத்தர் இரு வாரங்களுக்கு மேல் பெரிதும் சிந்தித்துக்கொண்டிருந்தார். இதையறிந்த லூத்தரது தோழர் அவரைத் தடுத்துச் சாந்தி செய்ய முயன்றனர். அவருடைய தந்தையார் இதனைக் கேள்வியுற்றுக் கொதித்தெழுந்தார். தனது மைந்தன் சாமியாராவதற்குத் தான் ஒருக்காலும் சம்மதிக்கவே முடியாதென்றும், அவ்வாறு தந்தைச் சொல்மீறி மார்ட்டின் சாமியாரானால் தன் பெற்றோரை விட்டுப் பிரிய நேரிடும் என்றும் அறிவித்தார். ஆனால் லூத்தருக்கோ தான் ஆபத்து வேளையில் செய்த பிரதிக்கினையை அலட்சியப்படுத்த முடியாது போய்விட்டது. இடியோசையும், பிரதிக்கினை சத்தமும் அவரது செவிகளில் எப்பொழுதும் தொனித்துக்கொண்டேயிருந்தன. இடியை மறந்தாலும் பிரதிக்கினையை அவரால் மறக்க முடியாது போய்விட்டது.

பாவத்தின் சம்பளம் மரணம், இப்பாவ மரணத்தினின்று மாந்தரை விடுதலையாக்கக் கூடியவர் இறைவன் இயேசு இரட்சகர் ஒருவர் மட்டுமே என்பதை அப்பொழுது அறியாது போன மார்ட்டின் லூத்தர், சந்நியாச மார்க்கத்தால் பாவ மரணத்தினின்று விடுதலை பெறலாமென்று தவறாகக் கருதியவராய்த் தாம் ஒரு சந்நியாச மடத்தில் சேர்ந்து சாமியார் ஆகிவிடுவதுதான் நல்லது என்று முடிவு கட்டிவிட்டார்.

1505-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 17-ஆம் தேதி சாயங்காலம் மார்ட்டின் லுத்தர் தமது கல்லூரித் தோழருக்கு ஒரு பிரிவு உபசார விருந்து அளித்தார். தமது தீர்மானத்தைத் தமதருமை நண்பருக்குத் தெரிவித்தார். இதனையறிந்த நண்பர்கள் நெஞ்சுடைந்தனர்; குலை வெடித்ததுபோல நடு நடுங்கினர். மார்ட்டின் லுத்தரைக் கெஞ்சி கெஞ்சி, அவர் கல்லூரியை விட்டுச் சந்நியாச மடத்தில் சேர்ந்து சாமியாராவதற்கு ஒருபோதும் சம்மதியோம் என்று அவரைத் தடுத்து நிறுத்தப் பார்த்தனர். மாணவர் மாணிக்கமே, கலைஞர் திலகமே, நீ சாமியாராகி மடத்துக்குள் அடைபட்டுக் கிடக்க நாங்கள் அனுமதி தரமாட்டோம் என்று கூறி, மார்ட்டின் அவ்வெண்ணத்தைக் கைவிட்டுவிடுமாறு, கனிவோடு கெஞ்சி மன்றாடிப் பார்த்தார்கள். ஆனால் மார்ட்டின் லுத்தரோ முன்வைத்த காலைப் பின் எடுக்க சம்மதியாதவராய், தான் உறுதிமொழி கூறியவாறே சாமியாராகித் தீருவேன் என்று தீர்மானித்தவராய் உலகத்தையும் பல்கலைக் கழகத்தையும் துறந்து, தனது அருமை நண்பர்களையும் விட்டுப்பிரிந்து, சில சன்மார்க்கப் புத்தகங்களை மட்டும் கையிலெடுத்துக் கொண்டு, அன்றிரவுதானே அகுஸ்தீனரின் சந்நியாச மடக் கதவைத் தட்டித் தன்னை ஒரு சந்நியாசியாக ஏற்றுக்கொள்ளுமாறு விண்ணப்பித்து நின்றார். இருபத்திரண்டு வயதுடைய வாலிபனான மார்ட்டின் லுத்தர் - கல்விக் களஞ்சியமான மார்ட்டின் லுத்தர்—சாமியார் வாழ்க்கையைப் பின்னர் ஒழிக்கப்போகிற மார்ட்டின் லுத்தர் இப்பொழுது சாமியார் ஆனார்.

''ஆதலால் விசுவாசம் வருகிறதற்கு முன்னே வெளிப்படப் போகிற விசுவாசத்திற்கு ஏதுவாக நாம் அடைக்கப்பட்டவர்களாய் நியாயப்பிரமாணத்தின் கீழ் காவல் பண்ணப்பட்டிருந்தோம். இவ்விதமாக நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்படுவதற்கு நியாயப்பிரமாணம் நம்மைக் கிறிஸ்துவினிடத்தில் வழிநடத்துகிற உபாத்தியாய் இருந்தது. விசுவாசம் வந்த பின்பு, நாம் உபாத்திக்குக் கீழானவர்களல்லவே'' (கலா. 3:23-25).

# 4

# சாமியாரான மார்ட்டின் லூத்தர்

''நீங்களோ ரபீ என்றழைக்கப்படாதிருங்கள்; கிறிஸ்து ஒருவரே உங்களுக்குப் போதகராயிருக்கிறார், நீங்கள் எல்லாரும் சகோதரராயிருக்கிறீர்கள். பூமியிலே ஒருவனையும் உங்கள் பிதா என்று சொல்லாதிருங்கள்; பரலோகத்திலிருக்கிற ஒருவரே உங்களுக்குப் பிதாவாயிருக்கிறார். நீங்கள் குருக்கள் என்றும் அழைக்கப்படாதிருங்கள்; கிறிஸ்து ஒருவரே உங்களுக்குக் குருவாயிருக்கிறார்'' (மத். 23:8-10).

மார்ட்டின் லூத்தர் அகுஸ்தீனரின் சந்நியாச மடத்தில் சேர்ந்துவிட்டார் என்ற செய்தியைக் கேட்டதும் அவருடைய தந்தையார் சொல்லொணாத் துயரத்தில் ஆழ்ந்தார். தன் மகன் ஒரு காலத்தில் புகழ் படைத்த நீதிபதியாகி, செல்வத்தில் மிதப்பான் என்று அவர் கொண்டிருந்த மனக்கோட்டை தகர்ந்து விட்டது. இப்பொழுது தனது மகன் உலகத்தைத் துறந்து ஓட்டாண்டியாகிவிட்டான் என்ற செய்தி அவரை நெருப்புபோல வாட்டி வதைத்தது. மார்ட்டின் லூத்தரது நண்பர்களும் தாங்கள் ஒரு மாபெரும் மகத்தான அறிஞர் திலகத்தை இழந்துவிட்டதுபோல மனமுடைந்து நின்றார்கள். அவரது நெருங்கிய நண்பர்களுக்கு அவரைப் பார்க்காதிருக்கமுடியவில்லை. எனவே அவர்கள் மார்ட்டின் லூத்தரைப் பார்த்து இழுத்து வருவதற்காக அம்மடத்திற்குச் சென்றனர். இரு நாள்களாக அவர்கள் அம்மடத்தைச் சுற்றி சுற்றிக் குழுமி மார்ட்டின் லூத்தரைக் கண்டு பேசுவதற்கு எவ்வளவோ முயன்றும் முடியாமற்போய்விட்டது. காரணம் மார்ட்டின் லூத்தரைப் பலவந்தப்படுத்தி வலுக்கட்டாயமாய் அவரைப் பிடித்திழுத்துக்கொண்டு போவதற்கு முயற்சிகள்

நடக்கும் என்பதை யூகித்துக்கொண்டவர்களாய் அம்மடத்தினர் தங்கள் மடத்துக் கதவை இழுத்துச் சிக்கென மூடிக்கொண்டார்கள். ஒரு மாத காலம் மடம் அடைபட்டுக் கிடந்தது. ஒரு மாதத்திற்குப் பின்னரே நண்பர்கள் மார்ட்டின் லூத்தரைக் கண்டு பேச முடிந்தது. இந்த ஒரு மாத காலத்திற்குள் மார்ட்டின் லூத்தர் சந்நியாச வாழ்க்கையில் எவ்வளவோ வலுவடைந்து வளர்ந்திருந்தார். சந்நியாச வாழ்க்கையிலிருந்த மார்ட்டின் லூத்தரை ஒருவரும் அசைக்க முடியாது போய்விட்டது.

மார்ட்டின் லூத்தர் சந்நியாச மடத்திற்குள் புகுந்தவுடனே தனது பெயரை மாற்றி, அகுஸ்தீன் என்ற பெயரை வைத்துக்கொண்டார். பெயரை மாற்றி புதுப்பெயர் வைத்துக் கொண்டவுடனே மார்ட்டின் லூத்தர் புது மனிதராக மாறி விட்டாரா? இல்லவே இல்லை. அவரது பழைய சுபாவம் இன்னும் மாறினபாடில்லை. தான் நினைத்தபடி சந்நியாச வாழ்க்கையை மேற்கொண்டபடியால் லூத்தருக்கு மனச்சாந்தி கிட்டியதா? இல்லவே இல்லை. பாவப் பாரம் இன்னும் தன்னை அழுத்திக்கொண்டேயிருந்த அனுபவம்தான் இன்னும் லூத்தருக்கு இருந்தது. மனச் சமாதானம் இல்லை. மன மகிழ்ச்சியோடு அவர் எப்பொழுதும் நூல் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தாரா? அதுவும் இல்லை. அவர் இப்பொழுது வாசித்துக் கொண்டிருக்க முடியாது; அவர் வேலை செய்ய வேண்டும். அவர் முதலாவது மடத்தின் சேவகனாகச் சேவை செய்ய நேரிட்டது. ஒரு பணியாளன்போல மடத்தைப் பெருக்கி சுத்தம் செய்யவேண்டும். கதவுகளைத் திறப்பதும் அடைப்பதும் அவருடைய வேலைதான். பிறர் இடும் குற்றேவல்களைச் செய்வதும் அவர்தான். அத்தனைப்பேரையும் சேவித்து நிற்பதும் அவர்தான். மடத்துப் பணியெல்லாம் செய்து முடித்த பின்னர், அவர் பிச்சைப் பாத்திரம் கையில் ஏந்திக்கொண்டு தெருத் தெருவாக அலைந்து, வீடு வீடாகப் பிச்சை வாங்கி வரவேண்டும். பிச்சை எடுத்து அலுப்புற்றவராய் இளைத்துக் களைத்து வரும் மார்ட்டின் லூத்தர் இனி

மேலாவது சிறிது இளைப்பாறி புத்தகம் வாசிக்கலாமென்று புத்தகத்தைக் கையிலெடுத்தார். உடனே மற்ற சந்நியாசிமார் அவரை எச்சரித்து கண்டித்து பேசி, ''இவ்வாறு புத்தகம் வாசிக்கும் சந்நியாசியால் இம்மடத்திற்குச் சிறிதும் நன்மை ஏற்படாது. எவ்வளவு தூரம் வீடுவீடாய் அலைந்து திரிந்து அதிக பிச்சை வாங்கி வருகிறானோ அந்தச் சந்நியாசியாலேயே இந்த மடத்திற்கு அதிக நன்மை விளைகிறது'' என்று காரசாரமாய்ப் பேசுவர்.

இத்தகைய கண்டிப்பான சட்ட திட்டங்களாலும், சுய வெறுப்பான சந்நியாச நெறியாலும் தனக்குப் பாவ விமோசனமும் பேரின்பப் பாக்கியமும் கிட்டுமென்று மார்ட்டின் லூத்தர் கருதியபடியால், அவர் கடும் சந்நியாச நெறியில் ஈடுபடத் தயங்கவில்லை. எனினும் எப்படியாவது அவர் சிறிது நேரமாவது புத்தகம் வாசிக்காமல் இரார். தூக்கத்தைக் கெடுத்துக்கூட அவர் வாசிப்பதற்குத் தயங்குவதில்லை. அடிக்கடி உபவாசமிருந்து தியானத்தில் ஈடுபடவும் நேரம் சம்பாதித்துக்கொள்வார். இவ்வாறு சரியான உணவின்றி, போதிய ஓய்வின்றி, அல்லும் பகலும் அயராது சந்நியாச தொண்டாற்றி வந்த மார்ட்டின் லூத்தர் இளைத்து, மெலிந்து, எலும்பும் தோலுமானார்.

ஏழு வாரங்களாக அவர் சரியானபடி தூங்கவேயில்லை. நான்கு நாள்களாக அவர் பட்டினி கிடந்தார். எனினும் அவருக்கு மனச் சமாதானம் ஏற்படாதுபோகவே, அவர் ஓர் இருட்டு நிலவறைக்குள் புகுந்து யாரும் தன்னைக் காணாதவாறு அடைத்துக்கொண்டு தவம் செய்து கொண்டிருந்தார். சில நாள்களாக அந்த அறையின் கதவு திறக்கப்படவில்லை. லூத்தர் உள்ளே உண்ணா நோன்பிருந்து தனிமையாக ஆழ்ந்து ஜெபித்துக்கொண்டேயிருந்தார். பின்னர் ஆயாசத்தால் மூர்ச்சையாகி பிணம்போல தரையில் வீழ்ந்து கிடந்தார். சில நாள்களாக அந்த அறையிலிருந்து மூச்சு பேச்சு கேட்காதுபோகவே, அவரது நண்பராகிய லூக்கா எடம்பெர்கர் (Lucas Edemberger) என்பவர் கவலை தோய்ந்தவ

ரைக் கதவைத் தட்டிப் பார்த்தார். பதிலொன்றும் வராது போகவே சந்தேகமுற்றவராய், கதவை உடைத்துப் பார்த்தார். லூத்தர் பிணம்போல தரையில் கிடக்கக் கண்டார். நண்பர் எவ்வளவோ முயன்றும் நெடுநேரம் மார்ட்டின் தன்னறிவிழந்து அசைவற்றுக் கிடந்தார், நண்பர் பயந்து போய்விட்டார். மடத்திலுள்ள சந்நியாசிகள் சூழ்ந்து நின்று ஒரு ஞானப் பாட்டு பாடவே, மார்ட்டின் லூத்தர் சிறிது அசைந்தார். வெகு நேரத்திற்குப் பின்னரே அவருக்குத் தன்னறிவு வந்தது. மார்ட்டின் லூத்தருக்குச் சரீர தளர்ச்சியோடு மனக்கிலேசமும் ஆத்தும அந்தகாரமும் அதிகரித்துக் கொண்டே இருந்தது. ஆத்தும சாந்திக்காக அம்மடத்தில் சங்கிலியால் கட்டப்பட்டிருந்த பரிசுத்த வேதாகமத்தை ஆவலோடு அடிக்கடி வாசித்து வந்தார். தனது துயரங்களையெல்லாம் அள்ளிக் கொட்டி ஆறுதல் பெற ஏதுவாக ஓர் ஆள் கிடைக்காதா என்று லூத்தர் ஏக்கமுற்றிருக்கும்பொழுது, ஆண்டவர் அற்புதமாக அவரிடம் ஓர் உதவியாளரை அனுப்பச் சித்தங்கொண்டார். அந்த நேரத்தில் அந்த ஆள் உதவி கிட்டாவிட்டால், மார்ட்டின் லூத்தர் மனம் உடைந்து போயிருப்பார்.

மார்ட்டின் லூத்தர் சேர்ந்திருந்த அகஸ்தீன் மடத்திற்கு மேல் விசாரணைக் குருவாயிருந்த ஜாண் ஸ்தௌபிட்ஸ் (**John Staubitz**) என்னும் பக்தன் அம்மடத்தைப் பார்வையிட அப்பொழுது அங்கு வந்தார். அவர் பரந்த அறிவும், சிறந்த பக்தியும், விரிந்த அனுபவமும் உள்ள ஒரு குருவானவர். அக்காலத்தில் பொதுவாகக் குருமார் புதிய ஏற்பாட்டைக் கிரேக்க மொழியில் படிக்கிறதில்லை. இவரோ புதிய ஏற்பாட்டை அம்மூல மொழியில் ஆர்வத்தோடு வாசித்து, சிலுவையிலறையுண்டு உயிர்த்தெழுந்த கிறிஸ்துவைத் தியானிக்கவும், அவரில் பக்தி செலுத்தவும் கற்றிருந்தார். ஸ்தௌபிட்ஸ் அம்மடத்திலுள்ள எல்லாச் சந்நியாசிமாரையும் கண்டு பேசி வருங்கால், எலும்பும் தோலுமாயிருந்த மார்ட்டின் லூத்தரையுங் கண்டு, அவர்பால் தனி அக்கறை

யும், அன்பும், கவர்ச்சியுங்கொண்டார். மார்ட்டின் லூத்தர் உண்ணாவிரதத்தால் உடலெல்லாம் மெலிந்து. ஆத்தும விசாரத்தால் மனம் சோர்ந்து காணப்பட்டார். இதய சாந்திக்காக ஏங்கிக்கிடந்தவர்போல காட்சியளித்தார். அவரது அகத்தின் தாகம் முகத்தில் தெரிந்தது. ஆத்துமச் சமாதானத்திற்காகத்தான் எதை வேண்டுமானாலும் செய்யத் தயார் என்பதுபோல் காணப்பட்டார். ஸ்தௌ பிட்ஸ் ஒரு காலத்தில் இதே சாந்திக்காக இவ்வாறெல்லாம் பாடுபட்டவர்தாம். எனவே தன்னைபோல ஆத்தும சமா தானத்திற்காகத் தவித்துக்கொண்டிருந்த மார்ட்டின் லூத்தர் பால் மன இரக்கம் கொண்டார். அவரைத் தனியே அழைத்து உரையாட விரும்பினார். அதுபோன்றதொரு ஆத்தும தோழர் கிடைக்கமாட்டாராவென்று வாஞ்சைகொண்டிருந்த மார்ட்டின் லூத்தர் மனம் துள்ளியது. தனது அகத்தில் ஆழ்ந்து மறைந்து கிடந்த துயரங்களையும், சந்தேகங்களை யும், ஏக்கங்களையும், கவலைகளையும், திகில்களையும் அள்ளி அள்ளிக் கொட்டினார். தனது பிரச்சினைகளுக்கெல் லாம் ஸ்தௌபிட்ஸ் ஒரு பரிகாரம் அளிக்க முன்வர மாட்டாரா என்று லூத்தர் அவரது முகத்தை ஆவலோடு நோக்கினார்.

அப்பொழுது ஸ்தௌபிட்ஸ் லூத்தரைப் பார்த்து, ''நண்பனே, உனக்குத் தேவையானது ஒன்றே; நீ இயேசு கிறிஸ்துவை அண்டிக்கொள், அவருக்குள் எல்லா இகபர நன்மைகளும் இருக்கின்றன. அவர் உன்னை நேசிக்கிறார். நீ அவரை நேசிக்கவேண்டும். நீ அவரைப்பற்றி இன்னும் அதிகமாய் வாசித்து அறிந்துகொள்ளவேண்டும்'' என்று கனிவோடு கூறினதுமின்றி மார்ட்டின் லூத்தருக்குப் பரிசுத்த வேதாகமப் புத்தகம் ஒன்றை அன்பளிப்பாக வழங்கிச் சென்றார். அன்றிலிருந்து பரிசுத்த வேதாகமத்தைக் கண்ணும் கருத்துமாய் நேரம் கிடைத்தபொழுதெல்லாம் வாசித்து தியானித்து வந்தார் மார்ட்டின் லூத்தர். புண்பட்ட லூத்தரது நெஞ்சிற்குப் பரிசுத்த வேதாகமம் ஊற்றுண்ட

தைலம்போல இருந்தது. பரிசுத்த வேதாகமம் அச்சமயத்தில் மார்ட்டின் லூத்தருக்குக் கிடைத்திராவிடில், அவரது வாழ்க்கை வறண்டு கருகிப்போயிருக்கும். அவரது பாதை இருண்டுபோயிருக்கும். பரிசுத்த வேதாகமம் அவரது வாழ்க்கை பாதைக்கு மாபெரும் தீபமாக ஜில்லெனச் சுடர் விட்டு மிளிர்ந்தது; அவருக்கு ஒரு புது உற்சாகத்தையும், நம்பிக்கையையும், ஊக்கத்தையும் ஊட்டியது. அவரது வாழ்க்கை திருப்பத்திற்கு ஜீவ வித்திடப்பட்டது. வேதாகமக் சுரங்கத்தில் ஆழ்ந்து கிடந்த ஜீவ புதையலை மார்ட்டின் லூத்தர் கண்டுபிடித்துக்கொள்வதற்கு இது ஓர் உன்னத வழி காட்டியாய் அமைந்தது. ஆன்ம சாந்தியைத் தேடி லூத்தரது உள்ளம் அங்கும் இங்கும் அலைந்து திரிந்து அலசடிப்பட்டுக் கொண்டிருந்தது. ஆன்ம சமாதானத்தைத் தேடி அவரது இதயம் அளவுகடந்த பாரமும், கவலையும், ஏக்கமும் அடைந்த காரணத்தால் அவருக்கு மீண்டும் சுகவீனம் ஏற்பட்டு, கடுமையான நோய்வாய்ப்பட்டார். இந்தத் தடவை அவர் கட்டாயம் இறந்துபோய்விடுவார் என்று நினைக்கக்கூடிய அளவுக்கு அவரது நிலைமை படுமோசமாகி விட்டது. லூத்தரும் தமது வாழ்க்கைக்கு இறுதி வந்து விட்டது என்று நினைத்து மனம் துவண்டார்.

தம்மைப் பார்க்க வந்திருந்த ஒரு வயது சென்ற சாமியாரிடம் தமது நிர்ப்பந்தமான நிலைமையைப்பற்றி மன வேதனையோடு உள்ளம் குமுறிக் கூறினார். லூத்தரது இதயக் குமுறலைக் கண்ட சாமியார் என்ன செய்வதென்று தெரியாது திகைத்தவராய், விசுவாசப் பிரமாணத்தை மீண்டும் மீண்டும் பக்தி விநயத்தோடு சொல்லிக்கொண்டிருந்தார். அவ்வாறு சொல்லிக்கொண்டிருக்குங்கால், ''பாவ மன்னிப்பு உண்டென்று விசுவாசிக்கிறேன்'' என்ற வாசகம் இருண்டு கிடந்த லூத்தரது இதயத்திற்குச் சிறிது நம்பிக்கை ஒளி ஊட்ட ஆரம்பித்தது. எனது பாவம் மன்னிக்கப்படுமா? எனக்கு ஏதாவது விமோசனம் ஏற்படுமா? இவைபோன்ற கேள்விகள் லூத்தரது

இதயத்தில் தலைதூக்கி நின்றன. ''பாவ மன்னிப்பு உண்டென்று விசுவாசிக்கிறேன்'' என்ற விசுவாசப்பிரமாண வாசகம் அவரைத் தட்டி எழுப்பியது போலிருந்தது. அவருக்குச் சுகமேற்பட்டது.

மார்ட்டின் லூத்தர் அம்மடத்தில் இரு ஆண்டுகளாகச் சந்நியாச வாழ்க்கையாற்றியபின், அவர் குருவானவர் ஆவதற்குத் தகுதியானவர் என்று தெரிந்துகொள்ளப்பட்டார். 1507-ஆம் ஆண்டு மே மாதம் 2-ஆம் தேதி அவர் குருவானவராக அபிஷேகம் பெற்றார். அக்குருப் பட்டாபிஷேக ஆராதனைக்கு அவரது தந்தையாரும் அழைக்கப்பட்டிருந்தார். தந்தையும் அந்த ஆராதனையில் கலந்துகொண்டார்; இருபது பிளாரின் நாணயம் அன்பளிப்பாகத் தனது மைந்தனுக்கு மனமுவந்தளிக்க முன் வந்தார். மடத்துச் சாமியாரனைவரும் அவரது அன்புச் செயலைப் பாராட்டி, அவரது பெருமிதத்தைப் புகழ்ந்து அன்றைய சிறப்பு விருந்தில் தந்தையாரும் கலந்துகொள்ளவேண்டுமென்று வருந்தி அழைத்தனர். தந்தையார் அதற்கும் இசைந்தார். மடத்தில் விருந்து உண்டுகொண்டிருக்குங்கால் அருகே இருந்த சாமியார், மார்ட்டின் லூத்தர் அம்மடத்தில் சேர்ந்து குருவானவராகப் பட்டம் பெற்றுள்ளதின் அருமை பெருமைகளை இப்பொழுதாவது உணர்ந்து அறிந்துகொண்டீரா என்று கேட்டபொழுது, தந்தையார் மனம் நொந்து உள்ளம் கொதிக்க ஆரம்பித்தவராய், தனது மைந்தனை நோக்கி, ''அதிகம் படித்தவனே, உன் தாயையும், தகப்பனையும் கனம்பண்ணுவாயாக என்ற கற்பனையை நீ வேதத்தில் வாசித்ததில்லையோ? வயது சென்ற உனது அருமைத் தாயையும், கவலையால் மனம் மடிந்துபோயிருக்கும் உனது தந்தையையும் கைவிட்டு விட்டு நீ இங்கே சாமியாராயிருப்பது சரிதானோ? சிறிது சிந்தித்துப் பார்'' என்று சினந்து மொழிந்தார். இவ்வாறு தந்தையார் உள்ளம் குமுறி உரைத்த மொழிகள் மார்ட்டின் லூத்தரது உள்ளத்தை ஈட்டியால் குத்தி வாட்டி வதைக்க ஆரம்பித்தன.

குருப்பட்டம் பெற்றபோதிலும் மார்ட்டின் லுத்தரது மனத்தில் உண்மையான பேரின்ப சாந்தி பொங்கி எழாது போகவே அவர் மீண்டும் மனம் சோர்ந்து நின்றார். ஒரு காலத்தில் தான் இரட்சிப்பை அடைவதற்குக் குருவானவர் ஆகித்தான் தீரவேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்த லுத்தர், இப்பொழுது குருவானவராக பட்டம் பெற்ற பின்னரும், இரட்சிப்பின் நிச்சயம் பெறாது திகைத்தார், மருண்டார், இனி என்ன செய்வது என்று தெரியாது திருகத் திருக விழித்தார். அப்பொழுது ஆண்டவர் அவருக்கு ஒரு புதிய வழியைத் திறக்கச் சித்தங்கொண்டார். இந்தப்புத்திக் கூர்மையான மார்ட்டின் லுத்தரை அம்மடத்தில் மேலும் வெகு காலம் வைத்திருக்கக்கூடாதென ஸ்தௌபிட்ஸ் கருதினார். எனவே, விட்டென்பர்க் (Wittenberg) பல்கலைக் கழகத்தில் காலியாயிருந்த தத்துவ சாஸ்திரப் பண்டிதர் பதவிக்கு லுத்தரை நியமனம் செய்வதற்குத் தீர்மானித்தார் ஸ்தௌபிட்ஸ்.

*1508*-ஆம் ஆண்டு லுத்தர் விட்டென்பர்கிலுள்ள அகுஸ்தீன் மடத்தில் வந்து தங்கினார். அங்குத் தனக்கென ஒரு தனி அறை அமைத்துக்கொண்டு, கடும் தவ வாழ்க்கையில் ஈடுபட்டு, அங்குள்ள பல்கலைக் கழகத்தில் தத்துவப் போராசிரியராகவும் பணியாற்றி வந்தார். தத்துவ சாஸ்திரம் கற்றும் கற்பித்தும் வந்ததோடு நில்லாமல், வேத சாஸ்திரம் ஆழ்ந்து கற்பதில் முனைந்து வந்தார். எபிரெய. கிரேக்க மொழிகளை ஆர்வத்தோடு பயின்று வரலானார். வேதாகம மூல மொழிகளில் புலமைபெற்றிருந்தால் வேதாகமத்தை இன்னும் அதிக நுட்பமாய் வாசித்தறிய முடியும் என்று எண்ணினார். அவ்வாறே வேதாகம அறிவில் வளர்ந்து வந்தார். திருமுறை இயலில் பெரும் மேதையானார். திருமறைப் பேரறிஞர் தேர்வில் வெற்றி பெற்றார். திருமறைப் பேரறிஞர் (B.D.) என்ற பட்டமும் பெற்றார். அதன் பின்னர், பரிசுத்த வேதாகமச் சொற்பொழிவுகள் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்துமாறு அழைப்புப் பெற்றார். இந்த

வேதாகம ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் ஆற்றுவதில் அதிக ஆர்வம் காட்டினார் மார்ட்டின் லூத்தர். மென்மேலும் திரு மறையைத் துருவித் துருவி ஆராய இத்திருப்பணி அவருக்கு ஓர் அரிய வாய்ப்பு அளித்தது. இந்த வேதாகம ஆராய்ச்சியே பின்னர் அவர் இரட்சிப்பின் வெளிச்சத்தைக் கண்டுகொள்ள வழி வகுத்துத் தந்தது.

ஸ்தௌபிட்ஸ், மார்ட்டின் லூத்தரது திறமை கண்டு பெரிதும் மகிழ்ந்தார். அவரை இன்னும் அதிகமாய்ப் பயன் படுத்த விழைந்தார். அகுஸ்தீன் ஆலயத்தில் ஒழுங்காகத் திருமறைச் சொற்பொழிவுகள் ஆற்றி வருமாறு பணித்தார். இத்திருத்தொண்டு பின்னர் எழும்பவிருக்கும் மாபெரும் புரட்சிகரமான திருத்தத்திற்கு அடிகோலியது.

விட்டென்பர்க் சதுக்கத்தின் மத்தியிலே ஒரு பழமையான கோயில் கம்பீரமாக எழுந்து நிமிர்ந்து நின்றது. மூன்று அடி உயரத்தில் மரத்தால் அமைந்ததொரு பழமையான பிரசங்க பீடம் லூத்தரது வேதாகம ஆராய்ச்சிப் பிரசங்கங்களுக்கு இடம் தந்து நின்றது. கடல் மடை திறந்தாற்போல மார்ட்டின் லூத்தர் அறிவு கொழிக்கும் அரியப் பிரசங்கங் களைப் பொழிந்தருளினார். அவரது அதிசயிக்கத்தக்க பிரசங்க ஞானத்தைக் கண்டு மக்கள் வியப்புற்றனர். அவரது பிரசங்கத்தைக் கேட்க மக்கள் ஆவலோடு குழுமினர். மார்ட்டின் லூத்தர் திருமறை அமுதக் கடலில் ஆழ்ந்தெடுத்த முத்துக்களை அந்த ஆலயத்தில் குழுமியிருந்த மக்களுக்கு வாரி வாரி வழங்குவது வழக்கம். இப்பேராற்றல்மிக்க பிரசங்கங்கள் மக்களிடையே பெரும் புரட்சிகரமான மாறுதலை உண்டு பண்ணி வந்தன.

காரணம், அக்காலத்து மக்களுக்கு அதுகாறும் வேதத் தைப்பற்றிய அறிவு ஊட்டப்படாதிருந்தது. அவர்கள் கையில் வேதாகமப் புத்தகம் கொடுக்கப்படவில்லை. எனவே மக்கள் வேதாகமத்தை தாங்களே வாசித்து அறிந்து கொள்வதற்கு வாய்ப்பில்லாமலிருந்தது. தேவ வாக்கு அவர்களுக்கு மறை

பொருளாயிருந்தது. போப்புவின் வாக்கே வேத வாக்குபோல கருதப்பட்டது. எனவே, வேத வசனத்தை மக்கள் நேரிடையாக அறிந்துகொள்வதற்கு முடியவில்லை. மூடப் பழக்கங்களும், அனாவசிய மார்க்கச் சடங்குகளும், போலிக் கொள்கைகளும், குருட்டாட்டமும் எங்கும் நிலவியிருந்தன. வேத வசனத்தை மக்கள் நேரிடையாக அறிந்துகொள்ள முடியாத காரணத்தால் அவர்கள் தட்டுத் தடுமாறி, நெறி தவறி அலைந்துத் திரிய ஏதுவானது. அறியாமையும் அந்தகாரமும் எங்கும் தலைவிரித்துத் தாண்டவமாடின, உண்மையான கொள்கைகளுக்குப் பதிலாகப் பாரம் பரியச் சடங்காச்சாரங்கள் ஆதிக்கம் பெற்றிருந்தன, இயேசு கிறிஸ்துவை மட்டுமே தொழுவதற்குப் பதிலாகப் பக்தர்களையும், இரத்தச் சாட்சிகளுடைய எலும்புகளையும், உரோமத்தையும், பரிசுத்தப் பண்டங்களையும் தொழ ஆரம்பித்துவிட்டார்கள்.

தங்கள் தாய் மொழியில் இதயபூர்வமாகத் தெய்வத்தை ஆராதிப்பதற்குப் பதிலாக, புரிந்தோ புரியாமலோ இலத்தீன் மொழியில் மட்டுமே ஆண்டவனை ஆராதிக்க நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். பரிசுத்த நற்கருணையைப் பற்றியும் அவர்களுக்குள் விபரீதக் கொள்கையே நிலவியிருந்தது. உத்தரிக்கும் ஸ்தலத்தைப்பற்றிய பயங்கர எண்ணத்தால் அவர்கள் பணத்தைக் கொடுத்து அக்கொடூர உபாதையினின்று தங்களைத் தப்புவித்துக்கொள்ள வகை தேடினார்கள். பணம் சம்பாதிப்பதற்கு இதனை ஒரு சிறந்த உபாயமாக தெரிந்து கொண்டார்கள் போப்பானவரும், குருமாரும். எனவே, உண்மையான மனந்திரும்புதலுக்கும் பரிசுத்த கிறிஸ்தவ வெற்றி வாழ்க்கைக்கும் இடமில்லாது போயின. விசுவாச மார்க்கமாகிய கிறிஸ்தவ மார்க்கத்தை வெறும் வறட்டுச் சடங்காச்சார மார்க்கமாக்கிவிட்டார்கள். விசுவாசம் இருக்க வேண்டிய இடத்தைப் பணம் அபகரித்துக்கொண்டது. கிறிஸ்துவானவர் வாழவேண்டிய இடத்தை வீண் சடங்காச்சாரம் கவர்ந்துகொண்டது. தங்கள் புண்ணியக் கிரியை

களால் மனிதர் இரட்சிப்பைச் சம்பாதிக்க முற்பட்டார்கள். மனிதன் எவ்வளவுதான் முயன்றாலும் இரட்சண்ணியத்தைத் தன்னால் சம்பாதிக்க முடியாது என்பதை அறியாது போய் விட்டார்கள். மனிதனால் செய்யமுடியாததை மனிதனுக்காக இயேசுவானவர் தாமே தமது சிலுவை மரணத்தால் செய்து முடித்தார் என்ற சத்தியம் அவர்கள் கண்களுக்கு மறைவாயிருந்தது.

நமக்கு வேண்டிய எல்லா இகபர நன்மைகளையும் இயேசு நாதர் தமது சிலுவை மரணத்தால் சம்பாதித்து முடித்து விட்டார். அதற்கு அறிகுறியாகச் சிலுவையிலேயே "முடிந்தது" என்று வெற்றி முரசு கொட்டினார். இனி மனிதன் செய்யவேண்டியது ஒன்றுதான். இந்த இயேசு இரட்சகரை விசுவாசத்தால் தன் சொந்தமாக்கிக்கொள்ள வேண்டியது தான். காரணம் மனிதருக்கு வேண்டிய எல்லா இகபர பாக்கியங்களும் இந்த இயேசு கிறிஸ்துவுக்குள் இருக்கின்றன. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கும்போது, அவர் நமக்காக சிலுவையிலே சம்பாதித்த புண்ணியங்கள் எல்லாம் நமக்குச் சொந்தமாகிவிடுகின்றன. இச்சத்தியத்திற்குப் பதிலாகச் சுயநீதிக் கொள்கை அக்கால மக்களை அரி பிளவையைப்போல அரித்து வந்தது. கிறிஸ்துவாகிய தெய்வ ஒளியில் நடப்பதற்குப் பதிலாகப் போலிப் பக்தியென்னும் இருட்டுப் பாதையில் கண்மூடித்தனமாய்த் தடவித் தடவி அலைந்து திரிந்தனர்.

பரிசுத்த வேதாகமம் மக்களுடைய கண்ணைத் திறந்தது. லுத்தருடைய கண்ணும் திறப்பதற்குப் பரிசுத்த வேதாகமமே காரணமானது. வேதாகமத்தில் புதுப்புது உண்மைகளை மார்ட்டின் லுத்தர் கண்டு மகிழ்ச்சிக்கொண்டார். இம் மகிழ்ச்சி அவரை மென்மேலும் திருமறையை அலசி அலசி ஆராயத் தூண்டியது, அவர் எவ்வளவுக்கதிகமாய் அந்த ஆராய்ச்சியில் மூழ்கினாரோ அவ்வளவுக்கதிகமாய் ஆன்ம நன்மை பெற்றுப் பூரித்தார். அவரது பிரசங்கத்தைக் கேட்க வெகு தொலைவிலிருந்தும் மக்கள் வர ஆரம்பித்தனர். வேத

வசனங்களை நேரிடையாகக் கேட்கும் வாய்ப்பை பெற்ற மக்கள் மனம் மலர்ந்தார்கள். லூத்தரை வாயார வாழ்த்தினார்கள். ஆனால், மார்ட்டின் லூத்தருக்கோ பாவ மன்னிப்பின் நிச்சயம் இன்னும் ஏற்படவில்லை. ரோமன் மார்க்கத்தின் தலைமை நிலையமாகிய புனித ரோமாபுரிக்கு யாத்திரை செய்தால் பெரும் புண்ணியம் ஏற்படும் என்ற எண்ணம் அவரது இதயத்தின் ஆழத்தில் கிடந்தது. எனவே, புனித ரோமாபுரிக்குப் புண்ணிய யாத்திரை செய்வது எக்காலமோ என்று ஏங்கிக் கிடந்தார் லூத்தர்.

''கர்த்தாவே உம்முடைய இரட்சிப்பின்மேல் ஆவலாயிருக்கிறேன்'' உம்முடைய வேதம் என் மன மகிழ்ச்சி'' (சங். 119:174).

''உமது வேதத்தில் நான் எவ்வளவு பிரியமாயிருக்கிறேன்! நாள் முழுவதும் அது என் தியானம்'' (சங். 119:97).

''உமது வேதம் என் மனமகிழ்ச்சியாயிராதிருந்தால், என் துக்கத்திலே அழிந்துபோயிருப்பேன்'' (சங். 119:92).

''அநேகமாயிரம் பொன் வெள்ளியைப் பார்க்கிலும், நீர் விளம்பின வேதமே எனக்கு நலம்'' (சங். 119:72).

''உமது வேதத்திலுள்ள அதிசயங்களை நான் பார்க்கும்படிக்கு, என் கண்களைத் திறந்தருளும்'' (சங். 119:18).

# 5

# விசுவாசியான மார்ட்டின் லூத்தர்

''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்'' (ரோமர் 1:17). ''கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்'' (அப். 16:31).

''கிருபையினாலே விசுவாசத்தைக் கொண்டு இரட்சிக்கப் பட்டீர்கள்; இது உங்களால் உண்டானதல்ல, இது தேவனுடைய ஈவு; ஒருவரும் பெருமை பாராட்டாதபடிக்கு இது கிரியைகளினால் உண்டானதல்ல'' (எபே. 2:8, 9).

ஸ்தௌபிட்ஸ் பக்தனுக்கும் அகுஸ்தீன் மடத்துச் சாமியாரில் ஏழு பேருக்குமிடையே ஓர் அபிப்பிராய பேதம் ஏற்பட்டு வலுத்துக்கொண்டது. இரு சாராருக்குமிடையே ஒரு சமரச முடிவும் ஏற்படாது, பிளவு அதிகரித்துக் கொண்டே போவதைக் கண்ட இரு சாராரும் மார்ட்டின் லூத்தரை நடுநிலைப் பிரதிநிதியாகத் தெரிந்தெடுத்து, அவர் இரு சாரார் சார்பிலும் ரோமை நகர் சென்று, போப்பானவரிடம் இந்த இரு வேறு அபிப்பிராயங்களையும் தெரிவித்து, எது நியாயம் என்று போப்பானவரின் தீர்ப்புதனை அறிந்து வருமாறு அனுப்பினார்கள். புனித ரோமை நகர் செல்ல வேண்டும் என்று அளவுகடந்த ஆசைகொண்டிருந்த லூத்தருக்கு இது தெய்வச் செயலாகவே தென்பட்டது. பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல் எண்ணினார். 1510-ஆம் ஆண்டில் லூத்தர் ரோமை நகருக்குப் புண்ணியப் பயணம் செய்து, தனது தீராத ஆசையைத் தீர்த்துக்கொள்ள விரும்பினார். இப்புண்ணிய பயணத்தின் பயனாகத் தனக்கு மன அமைதி ஏற்படுமென்று நிச்சயங்கொண்டிருந்தார்.

லூத்தர் திருப்பயணத்தை ஆரம்பித்து, ஆல்ப்ஸ் மலையைக் கடந்து இத்தாலிய சமவெளியை அடைந்தார். வழியிலுள்ள மடங்களிலெல்லாம் அவர் தங்கித் தங்கிச் செல்ல வேண்டியதாயிருந்தது. சில மடங்களில் அவர் கண்ட காட்சி அவர் நெஞ்சை ஊடுருவிக் குத்திவிட்டது. பெனிடிக்தீன் இத்தாலிய மடத்தில் அவர் தங்கியிருக்குங்கால், அம்மடத்து அறைகளெல்லாம் பளிங்குக் கற்களால் அலங்காரம் பெற்று நிற்பதையும், சாமியார் பட்டு அங்கிகள் தரித்து ஆணவத்துடன் நடந்து திரிவதையும், ஆடம்பர வாழ்வையும், மாய்மால ஜீவியத்தையும் கண்டு திடுக்கிட்டார். வெள்ளிக் கிழமையன்று சாப்பாட்டு மேசையில் இறைச்சி இருப்பதைக் கண்டு அதிர்ச்சியுற்றார்; கொதித்தெழுந்தார். போப்பானவரும் திருச்சபையும் இத்தகைய செயல்களைக் கண்டித்து விலக்கிவிடுவதற்கு முன்வரவேண்டுமென்றார். அம்மடத்தினர் கோபம் கொண்டு, அவரை அம்மடத்தைவிட்டு வெளியேறுமாறு கட்டளையிட்டனர்.

மார்ட்டின் லூத்தர் அம்மடத்தைவிட்டு வெளியேறி, மீண்டும் பயணம் செய்து போலோக்னா நகர் மடம் வந்து சேர்ந்ததும் நோய்வாய்ப்பட்டார். சுகம் பெற்ற பின்னர், அவர் மீண்டும் தமது புண்ணியப் பயணத்தைத் தொடர்ந்துச் செய்து இறுதியில் நெடு நாள்களுக்குப் பின்னர் ரோமாபுரியை அண்டினார். தூரத்தில் ஏழு குன்றுகளின் நடுவே அழகாய் அமைந்துள்ள புனித ரோமை நகரைக் கண்ணுற்றபோது, லூத்தர் பக்தி பரவசம் கொண்டவராய், முழங்காற் படியிட்டு, ''புனித ரோமாபுரியே, நான் உன்னை வணங்குகிறேன்'' என்று கூறினார். புனித ரோமாபுரியின்மீது மார்ட்டின் பக்தனுக்கிருந்த பக்தியும், மரியாதையுந்தான் என்னே! என்னே!! தனக்கு நல்ல காலம் வரப்போகிறது என்று உள்ளம் பூரித்தார் லூத்தர். தனது வாழ்க்கையின் கனவு நனவாகப் போகிறதென்று நினைத்தார் லூத்தர். தனது வாழ்க்கை பிரச்சினைகளுக்கெல்லாம் ஒரு மருந்து கிட்டப்போகிறது என்று குதூகலித்தார் லூத்தர். தனது ஏக்கமெல்லாம் தீர்ந்து

பொற்காலம் மலரப்போகிறதென்று மகிழ்ந்தார் லூத்நர்.

புனித ரோமை நகருக்குள் பக்தியோடு பிரவேசித்தார் லூத்தர். ரோமைக் கண்டவர் பூலோகச் சொர்க்கத்தைக் கண்டவர்போல் இதயம் பூரித்தார். போப்பானவரின் அரண்மனையில் கால்மிதித்தபோது, அவர் மோட்ச வாசலில் கால் மிதித்ததுபோல் காணப்பட்டார். ஆனால் போப்பான வரின் அரண்மனையில் அவர் கண்ட ஆடம்பரமும், செல்வச் செருக்கும், அதிகார ஆணவமும் அவருக்குப் பெரும் வியப்பையும், திகைப்பையும் அளித்தன. செல்வச் செருக்கை அவர் உள்ளம் அருவருத்தது. ஆணவ அதிகார வாழ்வை அவர் இதயம் வெறுத்தது. போலி பக்தியும், மாய்மால தாழ்வும், வெளிவேஷமும் அவர் உள்ளத்தை வாட்டி வதைத்துவிட்டன.

அப்பொழுது ரோமாபுரியில் இரண்டாம் ஜூலியஸ் என்பவர் போப்பானவராயிருந்தார். லூத்தர் ரோமை நகர் வந்த காலத்தில் போப்பானவர் பிரான்சு தேசத்தோடு போர் தொடுத்திருந்தார். எனவே, லூத்தர் கொணர்ந்த வழக்குகளை ஆற அமர விசாரித்தறிந்து, இரு கட்சியாருடைய நியாயங்களையும் கேட்டு, ஒரு சமரச முடிவு கட்டுவதற்குப் போப்பானவருக்குப் போதிய நேரமில்லாதிருந்தது. எனினும் லூத்தர் தாம் கொணர்ந்திருந்த வழக்குகளை ஒரு திருப்தி கரமான முடிவுக்குக் கொண்டுவர ஏற்பாடு செய்துகொண் டாரென அறியக் கிடக்கிறது.

லூத்தர் ரோமை நகரில் ஓர் அகுஸ்தீனிய மடத்தில் தங்கி யிருந்தார். தனக்குக் கிடைத்த ஓய்வு நேரத்தை அவர் அப் புண்ணிய தலத்தைப் பார்வையிடுவதில் செலவிட்டார். தமக்குப் பெரும் புண்ணியம் கிட்டுமாறு அப்போஸ்தலரின் புனித கல்லறைகளைப் பார்வையிட்டுப் பணிந்துகொண்டு, மேலும் சரித்திரப் புகழ்பெற்ற பல அரிய காட்சிகளையும், புதுமைகளையும், புனிதப் பண்டங்களையும் கண்டுகளித்தார். போப்பானவரின் அரண்மனைக்குள்ளிருக்கும் பரிசுத்த ஆல

யத்திற்கெதிரே இருக்கிற பிலாத்துவின் படிக்கட்டுகளையும் தரிசித்தார். அதைப் பரிசுத்த ஏணி என்று கருதுகிறார்கள். அது எருசலேமில் பொருந்திய பிலாத்துவின் அரண்மனையிலிருந்து அற்புதமாய்த் தேவ தூதர்களால் ரோமாபுரிக்குக் கொண்டுவரப்பட்டுள்ளது என்று நினைக்கிறார்கள். அதில் 28 படிகள் இருக்கின்றன. இயேசு கிறிஸ்துவினுடைய பரிசுத்தப் பாதங்கள் பட்டுப் பரிசுத்தமாக்கப்பட்டுள்ள அந்தப் புனிதப் படிகளில் யார் முழங்காலால் நகர்ந்து ஏறி, ஒவ்வொரு படியிலும் கர்த்தருடைய ஜெபத்தைப் பக்தி விநயமாக உச்சரித்துக்கொண்டு செல்கிறார்களோ, அவர்களுக்கு ஒவ்வொரு படிக்கட்டுக்கும் ஒன்பது வருடத்துப் பாவங்கள் கட்டாயமாய் மன்னிக்கப்படும் என்பது ரோமச் சபையின் போதனை. மேலும், அப்புனிதப் படியில் முழங்காலால் ஏறி நின்று, கர்த்தருடைய ஜெபத்தை ஒருமுறை சொல்லும் பொழுது, ஒவ்வொரு படியிலும் ஓர் ஆத்துமாவை அவன் உத்தரிக்கும் தலத்தினின்று விடுவிப்பான் என்பதும் ரோமச் சபையின் போதனையாகும். மார்ட்டின் லுத்தர் இம்மா பெரும் மகத்தான புண்ணியங்களைச் சம்பாதித்துக்கொள்ளுமாறு அதிகப் பக்தி விநயத்தோடு, தேய்ந்துபோயிருந்த அந்தத் தூய படிக்கட்டுகளில் முழங்கால் தேய நகர்ந்து நகர்ந்து, படிதோறும் படிதோறும் கனிவோடு கர்த்தருடைய ஜெபத்தை உச்சரித்து, உச்சரித்து ஏறி உச்சியை அடைந்தார். உச்சத்தை அடைந்த மார்ட்டின் லுத்தர் உள்ளத்தில், ‘‘இதை உண்மையென்று கண்டது யார்?’’ என்ற வினா எழுந்தது. உண்மையான இரட்சிப்பை அடைவதற்கு இது சரியாயிருக்க முடியுமோ என்ற ஐயம் அவரது அகத்தைக் கவ்விக் கொண்டது. இஃது அல்ல, வேறொன்றும்தான் சரியான வழியாயிருக்கவேண்டும். ஆனால் அந்தச் சரியான வழி எது? பக்தி வைராக்கியமுள்ள உத்தம ரோம குருவாயிருந்த லுத்தருக்கு இச்சரியான வழி இதுதான் என்று காதில் பின் வருமாறு தொனித்ததுபோலிருந்தது: – ‘‘விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்.’’

லூத்தர் ஏறத்தாழ ஒரு மாத காலம் ரோமை நகரில் தங்கியிருந்தபோது கண்ட காட்சிகளும் கேட்ட செய்திகளும் அவர் மனதைப் புண்படுத்திவிட்டன. ரோமைச் சபை அதிகாரிகளின் அசுத்த வாழ்க்கையும், ஆடம்பரப் போக்கும், வெளிவேஷ மாய்மால வாழ்க்கையும், பக்தியின்மையும், உலக ஆதாய நோக்கமும், வெறும் கடமைக்காக இயந்திரம் போல ஆராதனை நடத்தும் கூலிக்கார மனப்பான்மையும் அவர் இதயத்தை ஈட்டிபோல ஊடுருவக் குத்தி வதைத்து நின்றன.

பரிசுத்தம் எதிர்பார்த்த இடத்தில் அசுத்தமும், பரிகாசமும், நரித் தந்திரமும் தங்கித் தரித்திருப்பதைக் கண்டு திகைப்படைந்தார். ரோமைப் பேராலயத்தில் ஒரு சமயம் லூத்தர் ஒரு பூசை நடத்தி முடிப்பதற்குள் அருகேயிருந்த இன்னொரு பரிசுத்த ஸ்தலத்தில் அதே பூசையை ஒரு குருவானவர் ஏழு முறை நடத்தி முடித்துவிட்டு லூத்தரது காதுக்குள், ''சீக்கிரம், சீக்கிரம், சீக்கிரமாய் முடித்துவிடு'' என்று கடுகடுத்துக் கூறியதைக் கேட்டு அவர் திடுக்கிட்டார். சனிக்கிழமையில் ரோமையிலுள்ள தூய யோவான் ஆலயத்தில் எந்தத் தாயாருடைய மகன் மீசா என்னும் பூசை செய்கிறாரோ, அந்தத் தாயார் பெரும் பாக்கியவதியாவாள் என்னும் நம்பிக்கை நிலவியிருந்தது. தமது பெற்றோர் இன்னும் உயிரோடு இருந்தபடியால் அவர்களைத் தமது ரோமைத் திருப்பூசையாலும், புனித படிக்கட்டு மந்திரத்தாலும் உத்தரிக்கும் தலத்தினின்று தம்மால் மீட்கக்கூடாமல் போயிற்றே என்று வருந்தினார். தமது பெற்றோர் அப்பொழுது செத்துப்போயிருந்தால் நலமாயிருந்திருக்குமே என்றும் எண்ணினார்.

இவ்வாறு ஒரு மாத காலமாக ரோமாபுரியில் தங்கி அம் மாநகரின் அக வாழ்க்கை, புறவாழ்க்கையைப்பற்றி நேரிடையாகக் கண்டு அறிந்துகொண்ட பின்னர், மார்ட்டின் லூத்தர் தான் ஒரு கால் பூலோகச் சொர்க்கம் என்று கருதியிருந்த ரோமை நகரைப்பற்றிய பின்வருமாறு அபிப்பிராயம் தெரி

வித்துள்ளார்:— ''இவ்வுலகில் நரகம் இருக்குமாகில், அந் நரகத்தின்மீது இந்த ரோமை நகரம் கட்டப்பட்டுள்ளது என்றே சொல்ல வேண்டும். எல்லா வகையான பாவங்களுக் கும் இந்நகரம் இருப்பிடமாக அமைந்துள்ளது. இதனைப் பூலோக நரகம் என்றுதான் சொல்லவேண்டும். இப்பயங்கர நகர நரகத்தில் நடக்கும் பாதகங்களையும், அட்டூழியங்களை யும், நாம் கற்பனையில்கூடக் கிரகித்தறிந்து கொள்ள முடியாது. இங்கு நடக்கும் ஈனச் செயல்களை ஒருவன் தன் சொந்தக் கண்களைக்கொண்டு கண்டு, தன் சொந்தக் காதாரக் கேட்டாலொழிய அவற்றை நம்பவேமுடியாது. நானும் இங்குவந்து இப்பாதகச் செயல்களை என் கண்ணாரக் கண்டு காதாரக்கேட்டிராவிடில் நம்பியிருக்கவேமாட்டேன். நான் முற்றிலும் அதிருப்தி அடைந்துள்ளேன்; பெரிதும் ஏமாற்றம் பெற்றுள்ளேன்; இப்புனித நகர் இப்படி இருக்கு மென்று நான் கனவிலும் கருதியதில்லை; இனி எனக்கு புண்ணியம் பகர்வது எது? இனி எனக்கு விமோசனம் தருவது எது? புனித ரோமைப் புண்ணிய தரிசனம்கூட எனக்குப் புண்ணியம் தரவில்லையே! இனி எனக்குப் புண்ணியம் தருவது எது? யார்?''

'எனக்கு உய்வேயில்லையா' என்று அங்கலாய்த்த மார்ட் டின் லூத்தருக்கு அவர் புனிதப் படிக்கட்டின்மீது முழங் காலினின்று அங்கலாய்த்தபோது கொடுக்கப்பட்ட அதே தெய்வ வாக்கு எப்பொழுதும் அவரது இதயந்தனில் தொனித்துக்கொண்டே இருந்தது, அதாவது, ''விசுவாசத் தினாலே நீதிமான் பிழைப்பான்.''

தான் சென்ற தூது விவகாரத்தை ஒருவாறு வெற்றிகர மாக முடித்துக்கொண்டு, மார்ட்டின் லூத்தர் விட்டென்பர்க் பல்கலைக் கழகம் திரும்பி, தமது திருப்பணியைச் செய்து வரலானார். வழக்கம்போல் விட்டென்பர்க் தேவாலயத்தில் திருமறை ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் வந்தார். அவரது பிரசங்கப் புகழ் அவ்வட்டாரமெங்கும் பரவ ஆரம்பித்தது. பிரபல இளவரசனும், விட்டென்பர்க்

பல்கலைக் கழகத்து நியமன அதிகாரம் வகித்த தலைவருமான பிரட்ரிக் என்பவர் லூத்தருடைய கல்வி சிறப்பையும் பிரசங்க ஆற்றலையும்பற்றிக் கேள்விப்பட்டுத் தாமே லூத்தரது பிரசங்கத்தை நேரிடையாகக் காது குளிரக் கேட்டுப் பயன் பெறுவதற்காக விட்டென்பர்க் தேவாலயம் வந்தார். லூத்தரது பிரசங்க வன்மையைக் கண்டு பிரமித்து நின்றார் பிரட்ரிக் இளவரசர். லூத்தர் இறை இயல் பண்டிதர் (Doctor of Divinity) பட்டத் தேர்வுக்குப் பயிலுமாறு பணித்தார் பிரட்ரிக் இளவரசர். அதற்கான செலவுகளை யெல்லாம் தாமே கொடுத்துதவ முன் வந்தார் இளவரசர். ஸ்தௌபிட்ஸ் நண்பர் லூத்தரை இத்துறையில் அதிகமாக ஊக்குவிக்கவே லூத்தர் இறுதியில் இறையியல் பண்டிதர் பட்டத் தேர்வில் புகழ் மணக்க வெற்றி பெற்றார். 1512-ஆம் ஆண்டு அக்டோபர் 19-ஆம் தேதி மார்ட்டின் லூத்தர் இறை யியல் பண்டிதர் (Doctor of Divinity) என்னும் பட்டம் பெற்றார். இப்பெரிய பட்டம் பெற்ற அன்று, மார்ட்டின் லூத்தர் பரிசுத்த வேதாகமத்தை ஒழுங்காகத் தியானித்து ஆராய்ச்சி செய்யவும், வேதாகமச் சத்தியங்களைப் பிறருக்கு எடுத்துரைக்கவும் ஆணையிட்டு வாக்குறுதி செய்துகொண் டார். இதன் பின்னர் அவர் முழு இருதயத்தோடும், முழு ஊக்கத்தோடும், பரிசுத்த வேதாகமத்தை துருவித் துருவி ஆராய்ந்து பிரசங்கம் செய்வதில் முனைந்து நின்றார். ரோமச் சபையிலுள்ள குறைபாடுகளை லூத்தர் அறிந்திருந்தபோதி லும். அது தமது தாய்ச்சபை என்னும் கண்ணியமும், கௌரவமும், அன்பும், அக்கறையும் அவருக்கு அதிகமா யிருந்தன. அவரைப்போல் தாய்ச் சபைமேல் பக்தியும், வைராக்கியமும் பற்றும், பாசமும், உருத்தும், கருத்தும் கொண்டவர் ரோமைச் சபையில் வேறு எவரும் இருந்த தில்லையென்றுதான் சொல்லவேண்டும்.

சங்கீத நிபுணரான மார்ட்டின் லூத்தருக்கு வேதாகமத்தில் சங்கீதங்களின்மீது அதிக ஆர்வம் பிறந்தது. அல்லும் பகலும், சங்கீதங்களை வாசித்துத் தியானித்து ஆராய்ச்சி செய்து

ஆலயங்களில் அவற்றைப்பற்றிப் பிரசங்கம் செய்து வந்தார். 1516-ஆம் ஆண்டு ஸ்தௌபிட்ஸ், நாடெங்கும் சுற்றித் திருப்பண்டங்களைச் சேகரித்து வருமாறு பிரட்ரிக் இளவரசனால் அனுப்பப்பட்டார். ஸ்தௌபிட்ஸ் மீண்டும் வரும் வரை அவரது வேலைகளை கவனித்துக்கொள்ளுமாறு மார்ட்டின் லூத்தர் அவரது பதவியை வகித்துக்கொள்ள நேரிட்டது. அதன்படி அவர் அகுஸ்தீனிய மடங்களை மேற்பார்க்கும் கண்காணிப்பாளரானார். இத்தகைய பெரும் பதவிகளை லூத்தர் வகித்தபோதிலும், அவருக்கு மனச் சமாதானம் உண்டாகவில்லை. சமய வழிபாடுகளாலும், சன்மார்க்க வாழ்க்கையாலும், பக்தி நெறியாலும், திருப்பணியாற்றும் குருத்துவத் திருத்தொண்டாலும் பக்தன் லூத்தருக்கு மனச் சாந்தியோ, பாவ மன்னிப்பின் நிச்சயமோ கிட்டவில்லை. அப்பொழுது அவர் பல பக்தர்கள் காட்டிச் சென்றுள்ள அருள்நெறிகளை ஆவலோடு ஆராயத் தொடங்கினார். அகுஸ்தீன் அடிகள், தாலர் (Tauler), எக்கார்ட்டு (Eckhardt), கெர்சன் (Gerson) முதலிய பக்தர்கள் அனுசரித்த அருள்நெறி அவரது அகத்தை வெகுவாய்க் கவர்ந்தது.

அகுஸ்தீன் அடிகளாரிடமிருந்து பல அரிய நெறிகளைக் கற்றார், ஆண்டவர் பரிசுத்தமுள்ளவர். அவருக்குப் பாவம் முற்றிலும் வெறுப்பானது; பரிபூரண பரிசுத்தரான கடவுள் பாவியை நேசிக்கிறார்; அவனுக்கு இறங்குகிறார்; அவன் மனம் திரும்புவதற்கு உதவியாக கிருபையளிக்கிறார். பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து இயேசு இவ்வுலகத்தில் வந்தார். அவர் பாவியின் மரணத்தை விரும்பாமல், அவன் மனந்திரும்பிப் பிழைப்பதையே விரும்புகிறார். பாவத்தில் செத்துகிடக்கும் மனிதனுக்காக பரிசுத்தமுள்ள தெய்வம் தமது உயிரையே சிலுவையில் பலி கொடுத்து அவனுக்குப் புத்துயிர் அளிக்கிறார். தேவன் நீதியுள்ளவர்; அதே சமயத்தில் கிருபை மிக்கவர். ஆகையால், பாவியான மனிதன் நியாயமாய் அடையவேண்டிய நரக ஆக்கினையைத் தமது தலைமேலேற்றுச் சிலுவையில் அவற்றைச் சுமந்து தீர்த்தார்.

அவர் உலகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற தேவாட்டுக் குட்டி. அவரை விசுவாசிக்கிறவனுக்கு ஆக்கினைத் தீர்ப் பில்லை. தேவன், தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி இவ்வளவாய் இவ்வுலகத்தில் அன்பு கூர்ந்தார். இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கும் ஒரு விசுவாசியை அவர் தமது சொந்த நீதியால் உடுத்துவித்து, அவனைத் தமது சிலுவைப் புண்ணியத்தால் நரக ஆக்கினைக்கு தப்புவிக்கிறார். இவை போன்ற அகுஸ்தீன் முனிவரது அனுபவ மொழிகள் லூத்தரது உள்ளத்திற்கு அதிக ஆறுதல் அளித்தன.

தாலர், எக்கார்ட்டுபோன்ற மகான்களிடமிருந்து லூத்தர் சில அறிவுரைகள் பெற்றார். ஒரு மனிதனது பக்தி, ஒழுங்கு, கட்டுப்பாடு, வழிபாடு போன்றவற்றைவிட அவன் இறைவ னோடு கொண்டிருக்கும் அந்நியோன்ய ஐக்கியக் கூட்டுறவே பெரிதாகும் என்னும் அமுதமொழி அவருள்ளத்தைத் தட்டி எழுப்பியது.

கெர்சன் என்னும் பக்த சிரோமணியின் மணி மொழிகள் நொந்து போயிருந்த லூத்தர் மனத்திற்கு மருந்துபோல பலனளித்தன. உபத்திரவம் நல்லது. மனிதன் சோதிக்கப் படுவது சாலச் சிறந்தது. சோதனை இன்றேல், ஆன்மா வளர்ச்சியுறுவது எப்படி? எனினும் உபத்திரவங்களின் ஊடே கர்த்தரின் கரத்தைக் கண்ணுறலாம். கர்த்தர் சோதிக்கப் பட்டவர். ஆனால் சோதனைகளை வென்றவர். பாவ மரணத்தின்மீதும் பிசாசு உலகத்தின்மீதும் ஜெயம்கொண் டவர் ஆண்டவர். அவரை நம்பும் அடியாருக்குச் சோதனை யில் வெற்றி கிட்டுகிறது. உபத்திரவங்களின் ஊடே கடவுளின் கருணையைக் காண முடிகிறது. இவைபோன்ற அருள் மொழிகள் தொய்ந்துபோயிருந்த லூத்தரின் இதயத்திற்குப் பெரும் ஆறுதலாயிருந்தன.

இந்த அடியார்கள் வாயிலாக லூத்தருக்கு ஒரு பெரிய உண்மை புலப்பட்டது. அதாவது, மனிதன் தனது சன்

மார்க்கத்தாலல்ல, பக்தியால் அல்ல; இயேசு கிறிஸ்துவின் மீதுள்ள நம்பிக்கையால்தான் இரட்சிக்கப்படுகிறான்!

ஆண்டவர் அதிசயமானவர், ஞானமுள்ளவர்; கிருபை பெருத்தவர்; ஏற்ற வேளையில் ஏற்ற காரியத்தைச் செய்வதில் கரிசனையுள்ளவர். கூப்பிடுகிற காக்கைக் குஞ்சுக்கு ஏற்ற வேளையில் ஆகாரம் அளிக்கிற கர்த்தர். லூத்தரது வாழ்க்கை பக்குவப்பட்டிருந்த நேரத்தில், பருவத்தே பயிர் செய்யும் புத்தியுள்ள விவசாயியைப்போல, உழுது பண்பட்ட நிலத்தில் விதைகளை விதைக்கும் நல்ல உழவனைப்போல, சாந்திக்காக ஏங்கிக்கிடந்த லூத்தரது உள்ளத்தில் சத்திய சாந்தி வித்துகளை விதைக்க முன் வந்தார். ஒருநாள் ரோமர் நிருபம் முதல் அதிகாரத்தின் பதினேழாம் வாக்கியத்தைத் தியானிக்கையில். பல்லாண்டுகளாய் மறைபொருளாய் இருந்த இரட்சிப்பின் நற்செய்தியை லூத்தர் கண்டுகொள்ள அவரது மனக் கண்களைக் கர்த்தர் திறந்தருளினார்: —

விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான் (ரோமர் 1:17)

இத்தெய்வ வாக்கு அவருக்குப் புத்துயிர் ஊட்டி நின்றது. இவ்வாக்கியத்தை அவர் இதற்குமுன் அறிந்திருந்த போதிலும், இன்று அவ்வாக்கியம் தமக்கென்றே எழுதப்பட்டிருக்கிறதெனக் கண்டார். இவ்வாக்கியத்தில் ஆழ்ந்துகிடக்கும் கிறிஸ்தவ மார்க்க அடிப்படைச் சத்தியத்தை அன்று அவர் கண்கூடாகக் கண்குளிரக் கண்டுகளிக்குமாறு இறைவன் இயேசு அவரது இதயக் கண்களைத் திறந்தார்! இருண்டு கிடந்த லூத்தரது வாழ்க்கையில் இவ்வாக்கியம் அன்று ஓர் அணையா தெய்வத் தீபம் ஏற்றி வைத்துவிட்டது. அந்த அணையா தெய்வத் தீபம் இயேசுவே என்பதை லூத்தர் கண்டுகொண்டதும், அவரது இதயம் கொழுந்துவிட்டு ஜில்லெனப் பிரகாசித்தது. உலகத்திலே வந்த எந்த மனிதனையும் பிரகாசிப்பிக்கிற ஒளியே அந்த மெய்யான ஒளியாகிய இயேசு கிறிஸ்து. அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களாக அவரை ஏற்றுக்கொண்டவர்கள் எத்தனை

பேர்களோ, அத்தனை பேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரங் கொடுத்தார். இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான். விசுவாசியாதவனோ. தேவனுடைய ஒரே பேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாய் இராதபடியினால் அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்பட்டாயிற்று. கிருபையினாலே விசுவாசத்தைக்கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள். இது உங்களால் உண்டானதல்ல. இது தேவனுடைய ஈவு. ஒருவரும் பெருமை பாராட்டாதபடிக்கு இது கிரியைகளினால் உண்டானதல்ல.

''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்.'' 'விசுவாசத்தினால்' என்ற பதம் அவருக்குப் புத்தொளி ஊட்டியது, புத்துயிர் தந்தது. அவரது வாழ்க்கைக்குப் புதுத்திருப்பம் கொடுத்தது. ஆம், கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினால் நீதிமான் பிழைப்பான், தன்னைப்பற்றிய நம்பிக்கையினால் அல்ல, தனது சன்மார்க்கத்தைப்பற்றிய நம்பிக்கையால் அல்ல, தனது பக்தியைப்பற்றிய நம்பிக்கையினாலல்ல, தனது மார்க்க வழிபாட்டு நம்பிக்கையினாலல்ல, தனது புண்ணியச் செயல்களைப்பற்றிய நம்பிக்கையினாலல்ல, புனித நகரப் புண்ணியப் பயணத்தால் அல்ல, புனிதப் படிக்கட்டுகளின் மீது பக்தியோடு ஏறுவதால் அல்ல, இரத்தச்சாட்சிகளின் நினைவுச் சின்னங்களைக் கும்பிடுவதாலல்ல, பரிசுத்த பண்டங்களைத் தொழுவதாலல்ல, பரிசுத்தவான்களை வேண்டிக் கொள்வதாலல்ல, தனது திருப்பணியைப்பற்றிய நம்பிக்கையினாலல்ல, தான் சாமியாராயிருப்பதைப்பற்றிய நம்பிக்கையாலல்ல, வேறெந்த நம்பிக்கையாலும் அல்ல, இயேசு கிறிஸ்துவைப்பற்றும் நம்பிக்கையால் மட்டுமே நீதிமான் பிழைப்பான். இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்களுக்கு மட்டுமே இரட்சிப்பு உண்டு. இயேசு கிறிஸ்துவை விசுவாசியாதவர்களுக்கு அவர்கள் எவ்வளவுதான் சிறந்த பக்தர்களாயிருந்தும் இரட்சிப்பில்லை என்ற கிறிஸ்து மார்க்க அடிப்படை மூலச்சத்தியத்தை அன்று லூத்தர் கண்டுகொண்டார்,

கிறிஸ்தவ மார்க்கம் கிறிஸ்துவின்மீது மட்டுமே விசுவாசம் வைக்கும் மார்க்கம், கிறிஸ்து மார்க்கத்தின் உயிர் கிறிஸ்து தான். கிறிஸ்து இன்றேல், கிறிஸ்தவ மார்க்கமும் இல்லை. கிறிஸ்துதான் கிறிஸ்தவ மார்க்கம்!

கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்களுக்குக் கிறிஸ்துவே அவர்களின் இரட்சிப்பு ஆகிவிடுகிறார்; அவர்களின் நித்திய ஜீவன் ஆகிவிடுகிறார்; அவர்களின் மோட்ச இன்பமாகிவிடு கிறார்; அவர்களின் நீதியும் பரிசுத்தமுமாகிவிடுகிறார்; அவர்களின் சாந்தியும், சமாதானமுமாகிவிடுகிறார்!

இவ்வளவு காலமும் லுத்தரின் விசுவாசம் மார்க்கத்தின் மீதிருந்தது, மதத்தின் மீதிருந்தது. இன்று லுத்தரின் விசு வாசம் கிறிஸ்துவின்மீது பொங்கியது, தங்கியது. உடனே அவரது அகத்தினின்று சாந்தி பெருக்கெடுத்தது; சமாதானம் ஊற்றெடுத்தது; பேரின்பம் பிரவாகித்தது. கிறிஸ்துவைக் கண்ட லுத்தர் இரட்சிப்பைக் கண்டார்; சாந்தியைக் கண் டார்; சமாதானத்தைக் கண்டார்; நித்திய ஜீவனைக் கண் டார்; நித்திய பேரின்பத்தைக் கண்டார். தாயைக் கண்ட சேய்போல, கிறிஸ்துவைக் கண்ட லுத்தர் உள்ளம் பேரின் பத்தால் துள்ளியது! தனக்குத் தேவையானதெல்லாம் கிறிஸ்துவுக்குள்ளிருப்பதைக் கண்டு இதயம் பூரித்தார்!! பூரித்தார்!! தனக்கு வேண்டுவதெல்லாம் இயேசு கிறிஸ்து ஒருவரே என்பதைக் கண்டு பெரும் மகிழ்கொண்டார்! இவ் வுலகில் காணவேண்டியதைக் கண்டுகொண்டார்!! அடைய வேண்டியதை அடைந்துகொண்டார்!

விசுவாசியாகிய லுத்தரது இதயத்தில் இறைவன் இயேசு வாழ்ந்தார். எனவே, அவரது வாழ்வு, வாழ்வுபெற்றது. அவர் கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டியானார். தான் பெற்ற பேரின்பம் இவ்வையகமும் பெறவேண்டும் என்று துடித்தார். அவரது சொல்லும், செயலும், நினைவும், கனவும், கிறிஸ்து வாக மாறிவிட்டது. ''இனி நானல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்; நான் இப்போது மாம்சத்தில் பிழைத் திருக்கிறதோ என்னில், அன்புகூர்ந்து, எனக்காகத் தம்மைத்

தாமே ஒப்புக்கொடுத்த தேவனுடைய குமாரனைப் பற்றும் விசுவாசத்தினாலே பிழைத்திருக்கிறேன். நான் தேவனுடைய கிருபையை விருதாவாக்குகிறதில்லை.'' லூத்தர் பிரசங்கிக்கும் பிரசங்கமெல்லாம் கிறிஸ்துமயமாகிவிட்டது. கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசம் அவருக்கு உயிர் மூச்சாகிவிட்டது! அவர் உரையாடும் உரையாடலெல்லாம் கிறிஸ்துவாகவே பொங்கி வழிந்தன! அவர் தீட்டிய மடல்களிலெல்லாம் கிறிஸ்தவ மணம் கமிழ்ந்தது!!

எடுத்துக்காட்டாக, அவர் 1616-ஆம் ஆண்டு ஏப்ரல் 7-ஆம் தேதி தனது நண்பரான ஜார்ஜ் ஸ்பாலாடின் (George Spalatin) என்பவருக்கு வரைந்துள்ள கடிதத்தின் சாரம் கீழ்க்கண்டவாறு:—

''உமது ஆத்தும சுகம்பற்றி அறிய ஆசைப்படுகிறேன். உமது ஆத்துமா சுய நீதியினால் நிறைந்து செத்துப்போய் உள்ளதா? உமது பக்தியையும் சன்மார்க்கத்தையும் நம்பியிருக்கிறீரா? உமது நற்கிரியைகளை எண்ணிப் பெருமைப் பட்டுக்கொண்டிருக்கிறீரா? நீர் உமது சொந்தப் பக்தி புண்ணியக் கிரியைகளில் நம்பிக்கை வைப்பீரானால் வெறும் போலி நீதிமானாகவே தேவ சமுகத்தில் காணப்படுவீர். காரணம், மனிதனுடைய நீதி ஆண்டவருக்கு முன்பாக அழுக்குக் கந்தைபோல இருக்கிறது. நாம் பாவத்தில் கர்ப்பந் தரிக்கப்பட்டு, பாவத்தில் வளர்ந்துவரும் படும்பாவிகள்; நிர்ப்பந்தமான மனிதர் நாம். நம்மிடத்தில் நீதியில்லை, பரிசுத்தமில்லை. எனவே, நம்மிடமிருந்து கிடைப்பதெல்லாம் பாவமே. நமது பாவத்துக்கு நியாயமாக நமக்கு வரவேண்டிய தண்டனை மரணமே.

''கர்த்தர் ஒருவரே பரிசுத்தர். அவரிடத்தில் பாவம் இல்லை. எனவே, அவர் மரணத்துக்கு உரியவர் அல்லர். எனினும் மனிதர்பால் அவர் கொண்டுள்ள மட்டற்ற அன்புக் கிருபையால் மனிதருடைய பாவ மரணத்தைத் தம் தலைமீது ஏற்றுக்கொண்டார். அவர் நமக்காகச் செத்தார். நாம் அவரது சிலுவைப்புண்ணியத்தால் பிழைத்துக்கொண்டோம்.

நமது பாவ மரணத்தை அவர் ஏற்றுக்கொண்டார். அவரது புண்ணியத்தால் அவருடைய பரிசுத்தத்தையும், நித்திய ஜீவனையும் நாம் பெற்றுக்கொண்டோம். அவர் நமக்காக பாவமாக்கப்பட்டார். நாம் அவரது இரத்தப் புண்ணியத்தால் பரிசுத்தமாக்கப்பட்டுள்ளோம். நமது பாவத்தினிமித்தம் அவர் பிதாவினால் கைவிடப்பட்டார். நாம் அவருடைய தயவினால் மீண்டும் தேவனோடு சேர்த்துக்கொள்ளப்பட்டோம். அவர் நமக்காகச் சாபமானார். நாம் அவருடைய அருளால் ஆசீர்வாதம் பெற்றோம். நம்முடைய பாவத்தினிமித்தம் அவர் மரித்தார். நாம் அவரது இரக்கத்தால் பாவத்தினின்று மீட்கப்பட்டுள்ளோம். இயேசு கிறிஸ்துவே தேவனால் நமக்கு ஞானமும், நீதியும், பரிசுத்தமும், மீட்புமானார். இந்த இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதினால் மட்டுமே நாம் இரட்சிக்கப்படுகிறோம். இயேசுவைப் பற்றும் விசுவாசத்தினாலே மனிதர் வாழ்வு பெறுகிறார்கள்.''

''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்.'' நான் இவ்வளவு காலம் இந்த விசுவாசத்தைப்பற்றி அறியாதவனாயிருந்தேன். இப்பொழுது இயேசு கிறிஸ்துவே அவரைப் பற்றும் விசுவாசத்தை என் நெஞ்சிலே ஊற்றெடுக்கச் செய்தார். விசுவாசத்தை ஆரம்பித்தவரும் அவரே; வளர்க்கிறவரும் அவரே; கனியச் செய்கிறவரும் அவரே; இயேசுவைப் பற்றும் விசுவாசம் இயேசுவின் அருளால் உமது இதயத்திலும் பொங்கவேண்டுமென்று ஆசைப்படுகிறேன்; இயேசுவின் மீதுள்ள விசுவாசத்தால்மட்டுமே நீர் நீதிமான் ஆவீர். ''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்.''

''ஆகையால் எனதருமை நண்பரே, நமக்காகச் சிலுவையில் மரித்து உயிர்த்த இயேசு கிறிஸ்துவை விசுவாசித்தால் பிழைத்துக்கொள்வீர். உமது சுய நீதி சன்மார்க்கத்தின்மீது வைத்திருக்கும் நம்பிக்கையைப் பூண்டோடு பிடுங்கிப்போடும். கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளும். அப்பொழுது இயேசு கிறிஸ்து உமது இதயத்தில் உமது இரட்சகராகத் தங்கி,

உமது நெஞ்சிலே சாந்தியையும், பேரின்பத்தையும் பொங்கச் செய்வார்.''

*1516*-ஆம் ஆண்டு திருச்சபை வரலாற்றிலே பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய ஆண்டு. காரணம் இந்த ஆண்டில்தான் மார்ட்டின் லூத்தர் இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து அவரைத் தமது உயிருக்குயிராகக்கொண்டார். எனவே, லூத்தரது வாழ்வு மலரத் தொடங்கியது; அவருடைய வாழ்விலே மாபெரும் மகத்தானதொரு திருப்பம் ஏற்பட்டது. திருச்சபை போக்கிற்கே ஓர் அதி உன்னத புரட்சிகரமான திருப்பத்தைக் கொணர்வதற்குக் கர்த்தர் அதனைப் பயன்படுத்தினார். திருச்சபை மறுமலர்ச்சியுற்றது; புத்துயிர் பெற்றது. சடங்காச்சாரத்தில் மூழ்கி மடிந்து கிடந்த திருச்சபைக்கு உயிர்மீட்சி அளிப்பதற்கு, ஆண்டவர் தம்மால் உயிர்பெற்ற லூத்தர் விசுவாசியைத் தமது கையிலெடுத்து உபயோகிக்க எழுந்தருளினார்.

தான் ரோமர் நிருபத்தைத் தியானிக்கையில் கடவுள் கிருபையாகத் தனக்கு வெளிப்படுத்தச் சித்தங்கொண்ட இயேசு கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தின் அருமை பெருமைகளைப்பற்றி லூத்தர், தான் எழுதிய ரோமர் நிருப வியாக்கியான முன்னுரையில் விவரமாகக் காட்டியுள்ளார். இந்த விசுவாச விளக்கவுரையை வாசித்த எத்தனையோ மக்கள் கிறிஸ்துவுக்குள் விசுவாசிகள் ஆகியுள்ளார்கள். அவர்களுள் ஜாண் வெஸ்லியும் ஒருவர்.

மார்ட்டின் லூத்தரது கிறிஸ்துவைப்பற்றும் விசுவாச மார்க்கத்தால் அக்கால ரோமச் சபையில் அநேக புரட்சிகர மான மாறுதல்கள் ஏற்பட்டு, புத்துயிர் பெற்று பல புதுச் சபைகள் துளிர்த்தன.

அக்காலத்து ரோமச் சபைக் கிறிஸ்தவர்கள் இரட் சண்ணியத்தைச் சம்பாதிப்பதற்குத் தங்கள் வாழ்நாளெல் லாம் புண்ணியக் கிரியைகளைச் செய்தும், இரட்சிப்பின் நிச்சயத்தை பெற்றுக்கொள்ளாது தவித்தார்கள். லூத்தர்

கண்டுகளித்த கிறிஸ்துவின்மீதுள்ள விசுவாச நெறி அவர்களுக்கு ஒரு புத்துயிரையும், புது நம்பிக்கையையும், புது வாழ்வையும் அளித்தது. மார்க்கச் சடங்காச்சார இருளில் நடந்தவர்கள், கிறிஸ்துவாகிய பேரொளியைக் கண்டு மகிழ்ந்தார்கள். இந்தத் தெய்வ ஒளியைப்பற்றிச் சாட்சி பகர தெய்வம் மார்ட்டின் லூத்தரை எழுப்பினார்.

மக்கள் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்தபோது, அவர்கள் வாழ்க்கை மலர்ந்து கனிந்தது. அவர்கள் வாழ்வின் போக்கே மாறிவிட்டது. ஒருகால், துறவறம் பூண்டு சன்னியாச வாழ்க்கையால் இரட்சிப்பைத் தாங்களே முயன்று சம்பாதித்துக்கொள்ள முற்பட்ட மக்கள், இப்பொழுது கிறிஸ்துவின்மீதுள்ள விசுவாசத்தால் இலவச இரட்சிப்பு பெற்றவர்களாய் இதயம் பூரித்து, கடவுள் தங்களை எந்த இடத்தில், எந்த நிலையில், எந்தப் பதவியில் வைக்கச் சித்தம் கொண்டுள்ளாரோ அந்த இடத்தில் அந்தப் பதவியிலிருந்துகொண்டே கிறிஸ்துவுக்கு உத்தமச் சாட்சிகளாய்த் திகழ ஆரம்பித்தார்கள். தாழ்ந்திருக்கவும் தெரிந்துகொண்டார்கள். கிறிஸ்துவுக்காக வாழ்ந்திருக்கவும் அறிந்துகொண்டார்கள்.

கிறிஸ்துவின் மீதுள்ள விசுவாசத்தால் விசுவாசிகள் கடவுளோடு நேரிடையான ஐக்கிய உறவுகொண்டார்கள். இறைவன் இயேசுவை நேரிடையாக அடைந்துகொள்ள விடாது மக்களைத் தடுத்து நிறுத்தின தடுப்புச் சுவர் போன்ற மார்க்க ஆசாரம், புண்ணியக் கிரியைகள், சுயநீதி, பரிசுத்த பண்டம், பரிசுத்தவான்களின் மத்தியஸ்தம். பாவ மன்னிப்புச் சீட்டுகளின் கொடுமை போன்றவை அடியோடு தகர்த்தெரியப்பட்டன. கிறிஸ்துவை விசுவாசித்து கிருபையால் மக்கள் இரட்சிப்புப் பெறவும் நேரிடையாகப் பரிசுத்த வேதாகமத்தின் மூலமாகத் தேவ வசனத்தை மக்கள் யாவரும் அறிந்துகொள்ளவும் வழி பிறந்தது. தெய்வ வாக்கை அறிந்து, தெய்வத்தோடு நிலைத்திருந்து கிறிஸ்துவுக்குள் கனிகொடுக்கும் பரிசுத்த கிறிஸ்தவ வெற்றி வாழ்க்கை நடத்தும் வாய்ப்புப் பெற்றார்கள் அடியார்கள்.

நாம் இலவசமாகக் கிறிஸ்துவுக்குள் இரட்சிப்பைப் பெற்றுள்ளோம். எதற்காக? இந்த இலவச இரட்சிப்பை நமக்கென்று மட்டும் வைத்துக்கொள்வதற்கு அல்ல. இலவசமாய்ப் பெற்றதை நாம் மற்றவர்களுக்கு இலவசமாய்க் கொடுக்கவேண்டும். பிறருக்கு கொடுப்பதற்காகவே நாம் பெற்றுக்கொண்டுள்ளோம். அதனாலன்றோ நமதாண்டவர் தமதடியாரைப் பார்த்து, ''இலவசமாய்ப் பெற்றீர்கள்; இலவசமாய்க் கொடுங்கள்'' (மத். 10:8) என்று பணித்துள்ளார்.

மார்ட்டின் லுத்தர் தான் இலவசமாய்க் கிறிஸ்துவுக்குள் பெற்ற இரட்சிப்பைப் பிறருக்கும் அள்ளி வழங்க ஆரம்பித்தார். விட்டென்பர்க் பல்கலைக் கழகத்தில் ரோமர் நிருபத்தைப்பற்றி சொற்பெருக்காற்றுங்கால், 'விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்' என்ற தெய்வ வாக்கை அமுத வாக்காக அள்ளி வழங்கினார்; உள்ளம் உருகக் கூறினார்; கல்லும் கரையக் கனிந்துரைத்தார்; அதைத் தம் அனுபவச் சாட்சியாகப் பசுமரத்தாணிபோல பதிய வைத்தார். அதுவே கிறிஸ்தவ மார்க்க அடிப்படைச் சத்தியம் என்பதை ஆணித்தரமாக எடுத்துரைத்தார். அவரது தொனியிலே ஒரு புதிய ஆற்றல் தொனித்தது. அவரது முகத்திலே ஒரு புதிய மகிழ்ச்சி நிலவியது. அவரது அகத்திலே ஒரு புதிய பேரின்பம் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. அவரது உடை நடையிலே ஒரு புதிய வேகம் காணப்பட்டது. இவ்வுலகில் காண வேண்டியதைக் கண்டுகொண்டதை அவரது கண்ணே காட்டிற்று. அவரது தோற்றத்தில் ஒரு புதிய பொலிவு மிளிர்ந்து கொண்டிருந்தது. பழைய பக்தன் மார்ட்டின் லுத்தரையல்ல, அவர்கள் ஒரு புதிய கிறிஸ்தவ விசுவாசியான மார்ட்டின் லுத்தரைக் கண்டார்கள். கிறிஸ்துவுக்குள் அவர் ஒரு புதிய மனிதராகக் காணப்பட்டார். கிறிஸ்து என்றால் லுத்தருக்கு இப்பொழுது அவ்வளவு இன்பம்! கிறிஸ்து என்ற புனித நாமத்தை உச்சரிப்பதிலே அவருக்கு ஒரு தனிப் பெரும் ஆனந்தம்! அவரது உயிரே கிறிஸ்துவாக மாறிவிட்டதை

யறிந்தார்!! அவர் இப்பொழுது கிறிஸ்து ஒருவருக்காக மட்டுமே வாழ்கிறவர்போல காட்சியளித்தார்!!! கிறிஸ்து அவரது வாழ்க்கைப் போக்கையே மாற்றியிருப்பதைக் கண்ட மாணவர் வியப்புற்றனர். அம்மாணவர்களுள் பிற்காலத்தில் சுவீடன் நாட்டைக் கிறிஸ்துவுக்குள் கொணர்ந்த உலாவுஸ் பெட்ரி (**Olavus Petry**) என்பவரும் ஒருவர் ஆவார்.

இப்பொழுது மார்ட்டின் லூத்தருக்கு உலகுக்குப் பறை சாற்றி அறிவிக்க வேண்டிய ஓர் உன்னத தெய்வ நற்செய்தி கிடைத்தது. உலகுக்கு நற்செய்தியானவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. ஸ்தௌபிட்ஸ் அதிபருக்குப் பதிலாக அகுஸ்தீன் நெறி மடங்களை மேற்பார்க்கும் பொறுப்பை ஏற்ற மார்ட்டின் லூத்தர் தமது ஆதீனத்திற்குட்பட்ட எர்பர்ட் மடத்தையும் பார்வையிடச் சென்றார். இம்மடத்தில்தான் அவர் முதன் முதலாகத் தன்னைச் சாமியாராக ஒப்புக் கொடுத்து ஒரு பணியாள்போல பணிபுரிந்தார். ஒரு சேவகனைப்போல தரையைப் பெருக்கிச் சுத்தப்படுத்தி, வாசலைத் திறந்து மூடி, குற்றேவல் புரிந்து வந்திருந்தார். இதே மடத்தில்தான் அவர் சாந்திக்காக உண்ணாநோன்புற்றுக் கடுந்தவம் செய்து மூர்ச்சையாகி உணர்ச்சியற்றுக் கிடந்திருக்கிறார். அப்பொழுதெல்லாம் கிடைக்காத இரட்சிப்பின் நிச்சயம் இப்பொழுது விசுவாசத்தோடு இயேசு கிறிஸ்துவைத் தம் இரட்சகராக ஏற்றுக்கொண்டபோது கிட்டியது. இந்நற்செய்தியை அவர் அம்மடத்திலுள்ள சாமியாருக்கு ஆர்வத்தோடு எடுத்துரைத்தார். தத்துவ சாஸ்திர நூல்களையும், பிற உலக அறிவு நூல்களையும் படிப்பதை விட்டு விட்டு, அச்சாமியார் கிறிஸ்தவ வேதாகமத்தைக் கருத்தூன்றிக் கற்றுத் தியானித்து வருமாறு கிறிஸ்துவின் நாமத்தை முன்னிட்டு வேண்டிக்கொண்டார். கிறிஸ்துவின் மீதுள்ள விசுவாசத்தின் மேன்மையை அவர்களுக்கு எடுத்துரைத்தார். ''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்'' என்ற தெய்வ வாக்கின் மாட்சிதனை விவரித்தார்.

தமது கண்காணிப்புக்குட்பட்ட அகுஸ்தீன் நெறி மடங்களையெல்லாம் ஆறு வார காலம் சுற்றிப் பார்வையிட்டு அவர்களுக்குக் கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தின் அருமைதனைத் தெள்ளத் தெளிய விளக்கிக் காட்டினார். அகுஸ்தீன் நெறி மடங்களிலுள்ள அநேகச் சாமிமார், இந்நற்செய்தியைக் கேட்டு மனந்திரும்பினார்கள். விசுவாசத்தால் கிறிஸ்துவைத் தங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டார்கள். பின்னர் இந்நற்செய்தியை பிறருக்கும் பறைசாற்றுவதில் முனைந்து நின்றார்கள். எனவே, இக்காலம் சீர்திருத்த விடிவெள்ளிக் காலம் என்று போற்றப்பட்டது.

இவ்வாறு மடங்களை மேற்பார்வையிட்டு ஆறு வாரம் கழித்த பின்னர், லூத்தர் விட்டென்பர்க் திரும்பினார். அப்பொழுது அந்நகரிலே ஒரு பயங்கர கொள்ளைநோய் பரவி அநேக உயிர்களைப் பலியாக்கி வந்தது. அத்தொத்து நோய்க்குப் பயந்து அநேகர் உயிர்தப்ப அந்நகரையே விட்டு ஓடிவிட்டனர். மார்ட்டின் லூத்தரும் அந்நகரை விட்டு ஓடிப் பிழைத்துக்கொள்ளுமாறு கெஞ்சிக் கேட்டனர். ஆனால் மார்ட்டின் லூத்தரோ கடமையுணர்ச்சியுடையவராய், ''கடவுள் என்னை வைத்திருக்கும் இடத்திலிருந்து அவர் கொடுத்திருக்கும் கடமைகளை என்னால் இயன்றமட்டும் உண்மையோடு செய்து வருவேனேயன்றி, இக்கடமையைத் தட்டிக் கழித்துவிட்டுத் தன்னயம் உள்ளவனாய் என் உயிரை மட்டும் பாதுகாத்துக்கொள்ள ஊரைவிட்டு அப்படி ஓட முடியாது'' என்று அழுத்தமாய்க் கூறிவிட்டார். ஆம், மாட்டின் லூத்தர் ஓர் அஞ்சா நெஞ்சம் படைத்த வீர சிங்கமேதான்! இத்தகைய விசுவாச வீர சிங்கத்தைக் கொண்டுதான் ஆண்டவர் பலத்த போப்பு மார்க்க சடங்காச்சாரக் கோட்டையைத் தகர்த்தெறியச் சித்தங்கொண்டார்!

''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்.''

# 6

# சீர்திருத்தவாதியான மார்ட்டின் லூத்தர்

''தேவன் ஒருவரேயன்றிப் பாவங்களை மன்னிக்கத் தக்கவர் யார்?'' *(லூக்கா 5:21).*

''பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டு'' *(லூக்கா 5:24).*

''அவருடைய கிருபையின் ஐசுவரியத்தின்படியே.... மீட்பு இவருக்குள் (கிறிஸ்துவுக்குள்) நமக்கு உண்டாயிருக்கிறது'' *(எபே. 1:7).*

''அவருடைய (தேவனுடைய) குமாரனாகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி, நம்மைச் சுத்திகரிக்கும். நமக்குப் பாவமில்லையென்போமானால் நம்மை நாமே வஞ்சிக்கிறவர்களாயிருப்போம். சத்தியம் நமக்குள் இராது. நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்'' *(1 யோவான் 1:7-9).*

''பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார் என்ற வார்த்தை உண்மையும் எல்லா அங்கிகரிப்புக்கும் பாத்திரமுமானது'' *(1 தீமோ. 1:16).*

பத்தாம் லியோ (Pope Leo X) என்னும் போப்பானவர் 1513-ஆம் ஆண்டிலிருந்து ரோமச் சபையின் தலைவராக ஆளுகை செய்தார். அவருக்கு முந்தின போப்பானவர் புனித பேதுரு ஆலயத்தில் ஒரு மகத்தான மண்டபம் கட்ட ஆரம்

பித்தார். மைக்கேல் ஏஞ்சலோ என்ற உலகப் புகழ் பெற்ற சிற்பி அம்மண்டபத்திற்கு மாசிறந்ததொரு மாதிரி அமைப்புத் திட்டம் வகுத்துக் கொடுத்திருந்தான். அத்திட்டத்தின்படி அக்கட்டடத்தைக் கட்டி முடிப்பதற்குள் அப்போப்பானவர் இறந்துபோனபடியால், அம்மண்டபத்தைத் தொடர்ந்து கட்டி முடிக்கும் பொறுப்பு பத்தாம் லியோ போப்பானவர்மீது விழுந்தது. தமது பொக்கிஷ சாலையிலிருந்து பணம் எடுத்து இம் மண்டபத்தைக் கட்டி முடிக்க முற்பட்டால், தனது சிற்றின்பத்திற்கும், ஆடம்பரத்திற்கும் செலவிட போதிய பணமில்லாது போய்விடுமோவென்று நினைத்த பத்தாம் லியோ போப்பானவர், மேலும் நிதி திரட்டுவதற்கு ஓர் உபாயத்தைக் கையாடினார். இந்த உபாயம் யாதெனில், பாவ மன்னிப்புச் சீட்டு விற்று, பெரும் அளவில் பெரும் நிதியும் திரட்டவேண்டும் என்பதே.

பிராண்டன்பர்க்கில் ஆல்பிரெக்ட் (**Albrecht of Brandenburg**) என்னும் பேராசை மிக்க சிற்றரசன் *1513*-ஆம் ஆண்டில் போப்பானவருக்குப் பணம் கொடுத்து இரு அத்தியட்சாதீனங்களையும், *1514*-ஆம் ஆண்டில் மைன்ஸ் (**Meinz**) என்னும் பிரதம அத்தியட்சர் பதவியையும் சம்பாதித்துக்கொண்டான். ஜெர்மனி நாட்டிலுள்ள இப் பெரும் அத்தியட்சாதீனத்தை அவன் தனக்கென்று கொள்ளும்படி பத்தாம் லியோ போப்பானவருக்கு ஒரு பெரும் தொகையைக் கொடுக்க வேண்டியிருந்தது. திருச்சபை சட்டத்தின் பிரகாரம் ஒருவர் ஏககாலத்தில் பல அத்தியட்சாதீனப் பதவிகளை வகிக்கக் கூடாது. இச்சட்டத்தைப் பொருட்படுத்தாது இம்மூன்று அத்தியட்சாதீனங்களையும் தானே வகித்துக்கொள்ள அதிகாரம் அளிப்பதற்கு அவன் போப்பானவருக்கு இன்னும் அதிகப் பணம் கொடுக்க முன்வந்தான். ஆனால் அவன் போப்பானவருக்குச் செலுத்தவேண்டிய சுமார் ஐந்து இலட்சம் பொன் நாணயங்களையும் உடனே செலுத்துவதற்கு முடியாது போகவே, வட ஜெர்மனியின் பெரும் பகுதிக்குப் போப்பானவர் ஒரு ஜூபிலி வருடத்தை

நியமித்து, எட்டு ஆண்டுகள்வரை பாவமன்னிப்புச் சீட்டு விற்பனை செய்யும் வியாபாரத்தை நடத்துமாறு ஆல் பிரெக்ட்டை நியமித்தார். அவ்வாறு திரட்டப்படும் பணம் ரோமாபுரியிலுள்ள பரிசுத்த பேதுருவின் ஆலயத்து மண்ட பத்தைக் கட்டுவதற்குச் செலவிடப்படும் என்று சொல்லப் பட்டபோதிலும், ஆல்பிரெக்ட் அவ்வருவாயில் பாதிப் பாகத் தைத் தன் கடனுக்காகச் செலுத்த ஒழுங்கு செய்யப்பட்டிருந் தது. போப்பானவருக்குப் பணம் உடனே வேண்டியதிருந்த படியால், ஆல்பிரெக்ட்டுக்குப் பதிலாக ஒரு பெரிய பண வியாபாரி போப்பானவருக்கு வரவேண்டிய தொகையை முன் பணமாகக் கொடுத்து, தான் கொடுத்த பணத்தை வட்டி யுடன் பெற்றுக்கொள்ள, பாவமன்னிப்புச் சீட்டு வியாபாரத் தில் போப்பானவரால் மேலதிகாரம் பெற்றான்.

ஆல்பிரெக்ட்டின் முக்கியச் செயலாளராக தெத்செல் **(Tetzel)** என்னும் தொமினிக்கச் சந்நியாசி இவ்வியா பாரத்தை வெகு மும்முரமாக நடத்தத் தெரிந்து கொள்ளப் பட்டான். இவன் துன்மார்க்கம் கொண்டவன்; தீய பண்புகள் படைத்தவன், ஒரு சமயத்தில் தெத்செலுடைய பாதகச் செயல்களைக் கேள்வியுற்ற மேக்ஸி மில்லியன் **(Emperor Maximilian)** என்னும் சக்கரவர்த்தி அவனை ஒரு சாக்கிலே கட்டி, ஆற்றிலே தள்ளிவிடுமாறு கட்டளையிட்டிருந்தான். எனவே, தெத்செல் மகா பயங்கரமான பாதகன் என்பதை அறிந்திருந்த பிரட்ரிக் இளவரன் தன்னுடைய ஆதீனத் திற்குள் அவனை நுழையவிடக்கூடாதென்று ஆணை பிறப் பித்தான். எனவே, தெத்செல் விட்டன்பர்க் ஆதீனத்தில் நுழையாவிட்டாலும், அதன் அருகே வந்து அதற்கு நான்கு மைல் தொலைவிலுள்ள ஜூட்டர்பர்க் **(Juterburg)** என்னும் ரோமச் சபையில் தன் செல்வாக்கை நிறுவி, பாவமன்னிப்புச் சீட்டு வியாபாரத்தை வெகு மும்முரமாக நடத்தி வந்தான்.

தெத்செல்லுக்குப் பாவமன்னிப்புச் சீட்டுகளை ஏலம் கூறி விற்பதற்கு ஏற்ற பலத்த வெண்கலத் தொண்டையும், பிரமாதமான பேச்சு சாதுரியமும் இருந்தன. அவன் ஒரு

நகருக்குள் நுழையும்போது, மணிகள் அடிக்கப்பட்டு, நகர அதிகாரிகளும் பிள்ளைகளும் மேளதாளத்துடனும் ஆடல் பாடல்களுடனும் பவனி சென்று, அவனை அரச மரியாதை யுடன் நகருக்குள் அழைத்து வருவார்கள், போப்பானவரின் விருதுக் குறி பொறிக்கப்பட்டுள்ள ஒரு பெரிய சிவப்புச் சிலுவையும், ஒரு பட்டு மெத்தையில் வைக்கப்பட்டுள்ள போப்பின் அதிகாரப் பத்திரமும் பவனிக்கு முன் வெகு பக்தி விநயமாய்க் கொண்டு போகப்பட்டன. ஆலயத்துக்குள் நுழைந்தவுடன் அந்த உயர்ந்த செஞ்சிலுவையும், போப்பு வின் அதிகாரப் பத்திரமும், பணப் பெட்டியும் பீடத்திற்கு முன் வைக்கப்படும். தெத்செல் கம்பீர தோற்றம் படைத்த வனாய், மகா அலங்காரமான தொனியிலே மக்களைப் பார்த்துக் கீழ்க்கண்டவாறு முழங்குவான்: ''மகா ஜனங்களே, நீங்கள் கொடுத்து வைத்த மகாராசமார், நீங்கள் இதுகாறும் செய்துள்ள பாவங்களுக்கும் இனிமேல் செய்யப் போகும் பாவங்களுக்கும் போப்பானவர் கருணைகொண்டு அளித் துள்ள இப்பாவ மன்னிப்புச் சீட்டுகளால் உங்களுக்கு பாவ விமோசனம் கிடைக்கும். இப்பாவ மன்னிப்பு சீட்டுகள் மூலமாக உத்தரிக்கும் தலத்திலுள்ள உங்கள் முன்னோர் களையும் மீட்டுக்கொள்ளலாம். போப்பானவர்மூலமாக உங்களுக்கு இத்தகைய மாபெரும் மகத்தான வாய்ப்பு வாய்த் திருக்க, நீங்கள் ஏன் அவற்றை விலைகொடுத்து வாங்கி நன்மை பெறத் தயங்கவேண்டும்? பாவ மன்னிப்புச் சீட்டுக் கள் கடவுளுடைய மகத்தான ஈவுகள். நீங்கள் போதிய பணம் மட்டும் கொடுத்துவிட்டால் மிகப் பத்திரமாகப் பதிவு செய்யப்பட்டுள்ள போப்பானவர் அளிக்கும் பாவ மன்னிப்பு சீட்டுக்களை நான் உங்களுக்கு வழங்க தயாரா யிருக்கிறேன். நிறைய பணம் அள்ளிக்கொடுங்கள். நீங்கள் எவ்வளவு அகோர பயங்கரப் பாதகங்கள்தான் புரிந்திருந் தாலும், அவையெல்லாம் இப்பாவ மன்னிப்புச் சீட்டுகள் மூலம் பஞ்சாய்ப் பறந்துபோகும். இதற்கு முன்னர் நீங்கள் செய்துள்ள பாவங்கள் மட்டுமல்ல, நீங்கள் இனிச் செய்யப்

போகும் பாவங்களும் மன்னிக்கப்பட்டு போகும். ஆகவே நீங்கள் கைகூசாமல் கைநிறைய பணம் அள்ளி அள்ளிக் கொடுக்க மட்டும் தயங்கவேண்டாம். உங்கள் பாவம் மட்டு மல்ல, உங்கள் இனத்தாரின் பாவங்களும் மன்னிக்கப்பட்டுப் போகும். அவர்களை ஏன் இன்னும் உத்தரிக்கும் தலத்தில் கிடந்து வேதனைப்பட விடுகிறீர்கள்? ஆ! தோழர்களே, உங்கள் பெற்றோரும் உற்றார் உறவினரும் உங்களைக் கெஞ்சிக் கெஞ்சிக் கேட்கும் சத்தம் உங்கள் காதுகளில் தொனிக்கவில்லையா? இதோ, கேளுங்கள்; நாங்கள் உத்த ரிக்கும் தலத்தில் கிடந்து கண்ணீர் விடுவது பற்றி கவலை இல்லையா? நீங்கள் எங்களுக்காக மனதிரங்கிப் பணம் கொடுத்துப் பாவ மன்னிப்புக் சீட்டுகளை வாங்கமாட்டீர் களா? பணப்பெட்டியில் நீங்கள் கணீர் கணீரென்று எங்களுக் காகப் பணத்தைப் போட்டுப் பாவ மன்னிப்புச் சீட்டு வாங்கு வீர்களானால், நாங்கள் சலசலவென்று பணவோசையைக் கேட்டவுடனே, மளமளவென்று உத்தரிக்கும் தலத்தை விட்டுப் பறந்துபோய் முக்தியடைவோமே! ஆனால் உங்களுக் காகப் பணம் கொடுக்க மனதில்லையே!'' என்று உருக்கமாக உரத்த குரலிலே சிங்கம்போல் கர்ச்சித்துவிட்டு, தெத்செல் பிரசங்க பீடத்தை விட்டுக் கீழே விரைந்து வந்து, யாவரும் காணத்தக்கதாகப் பொற்காசுகளை அள்ளி அள்ளி பலத்த சத்தமுண்டாகும்படி கணீர் கணீரென்று காணிக்கைப் பெட்டியிலே போடவே, அதைப் பார்த்திருக்கும் மக்களும் பரவச முற்று, உணர்ச்சிவசப்பட்டு தெத்செல் கூறுகிறபடி தங்கள் பாவங்களுக்குத் தக்க பணங்களை அள்ளி அக்காணிக் கைப் பெட்டியிலே போட முன் வருவார்கள். ஒவ்வொரு பாவத்திற்கும் ஈடாகக் கொடுக்க வேண்டிய தொகை இவ்வளவு என்று தெத்செலால் நியமிக்கப்படும். அங்கே ஒரு குரு இருப்பான். அவன் பாவ மன்னிப்புச் சீட்டுகளைப் பணத் தொகை பெற்றதும் வழங்கி விடுவான்.

தெத்செல் இவ்வாறு ஊர் ஊராகப் போய், பாவ மன்னிப் புச் சீட்டுகளை விற்று, பெரும் நிதி திரட்டி வந்தான்.

விட்டென்பர்க் அருகே இவ்வியாபாரம் நடக்குங்கால் விட்டென்பர்க் ஆதீனத்திலுள்ள மக்களும் அங்கே சென்று பாவ மன்னிப்புச் சீட்டுகளை விலைகொடுத்து வாங்கி வந்தார்கள். அதோடு இனிமேல் செய்யப்போகும் பாவங்களுக்கும் மன்னிப்பு அதிகாரப் பத்திரம் பெரும் தொகை கொடுத்து வாங்கிக்கொண்டார்கள்.

ஒரு நாள் மார்ட்டின் லூத்தராகிய குருவானவரிடம் அவருடைய சபையாரில் சிலர் பாவ சங்கீர்த்தனம் செய்ய வந்தபோது, அவர்கள் மனந்திரும்பி அப்பாவங்களை உடனே விட்டுவிடுமாறு பணித்தார். ஆனால் அவர்களோ அப்பாவங்களைத் தாங்கள் விட்டுவிடுவதற்கு அவசியமில்லையென்று தர்க்கித்தார்கள். காரணம், தாங்கள் இனிச் செய்யப்போகும் பாவங்களுக்கும் மன்னிப்பளிக்கும் பாவ மன்னிப்புச் சீட்டுகளை தாங்கள் நிரம்ப பணம் கொடுத்து தெத்செல்லிடமுருந்து வாங்கியிருப்பதாகக் கூறினார்கள். இதனைக் கேட்டதும் லூத்தர் அதிர்ச்சியுற்றார். இயேசு சுவாமி தமது சொந்த இரத்தக் கிரயம் கொடுத்துச் சம்பாதித்துள்ள பாவ மன்னிப்பை மனிதர் இவ்வாறு விலை கூறி விற்பது தர்மமாகுமோ என்று கர்ச்சித்தார். இப்பாவ மன்னிப்புச் சீட்டு வியாபாரம் வேத சத்தியத்திற்கு முற்றிலும் விரோதமானது; இதனை வேரோடு பிடுங்கி எறிந்துவிடுவதே என் கடமையென்று வீரிட்டெழுந்தார்.

சபையாரைப் பார்த்து: நீங்கள் உண்மையாகவே மனந்திரும்பி, பாவங்களை அறிக்கை செய்து, உண்மையாய்ப்பாவ மனஸ்தாபப்படுகிறவர்களுக்குக் கிறிஸ்துநாதர் தரும் பாவ மன்னிப்பை விசுவாசத்தால் இலவசமாய்ப் பெற்று மனந்திரும்புதலுக்கேற்ற கனி கொடுத்து, கிறிஸ்துவுக்குள் பரிசுத்த வெற்றி வாழ்க்கையாற்றாவிட்டால், நீங்கள் உங்கள் பாவத்திலே செத்து அழிந்து ஒழிந்தே போவீர்கள். இந்த தெத்செல் தரும் பாவ மன்னிப்புச் சீட்டுகள் உங்களை இரட்சிக்காதென்று அழுத்தந் திருத்தமாய்க் கூறி, மக்களை எச்சரித்தார்.

இந்த எச்சரிப்பு மொழிகளை மக்கள் தெத்செலிடம் போய் உரைத்தார்கள். தெத்செல் லுத்தரது எதிர்ப்பை அறிந்தபோது மகா எரிச்சலுற்றான். அவன், ''சினத்தீ பறக்க, நெருப்பு மூட்டி, போப்பாண்டவருக்கு எதிராக எவ்வித ஆணைகளையும் சுட்டெரிப்பதற்குப் போப்பாண்டவர் எனக்கு அதிகாரம் வழங்கியுள்ளார்; போப்பாண்டவர் தவற முடியாதவர்; அவர் திருச்சபையின் உருவம். அவருக்குப் பாவ மன்னிப்பளிக்க அதிகாரமும், உரிமையும் உண்டு. போப்பாண்டவர் வாக்குக்கு எதிர்வாக்குரைக்க யாரால் முடியும்? போப்பாண்டவரை எதிர்த்து நிற்பவர் யார்? போப்பாண்டவர் வாக்குக்கு மறுவாக்குரைக்க இந்த மார்ட்டின் லுத்தர் யார்?'' என்று கண்களில் கோபக்கனல் தெறிக்கக் கடுகடுத்துக் கூறினான் தெத்செல்.

தெத்செலது வெஞ்சின மொழிகளைக் கேள்வியுற்ற மார்ட்டின் லுத்தர் சிறிதும் அஞ்சவில்லை. தான் கண்ட சத்தியத்திற்காக நெருப்பில் சுட்டெரிக்கப்படுவதற்கும் தயாரானார். தனது பாவங்கள் போப்பானவர் விடுத்த பாவ மன்னிப்புச் சீட்டுகளால் அல்ல, இயேசு கிறிஸ்துவின் பரிசுத்த இரத்தத்தால் மன்னிக்கப்பட்டன என்ற அனுபவ சத்தியத்தைக் கண்ட அவர், தெத்செலின் மிரட்டலுக்குச் சிறிதும் அஞ்சவில்லை. மக்களை ஏமாற்றிப் பாவ மன்னிப்புச் சீட்டுகளை விற்று பணம் சம்பாதித்த தெத்செலின் பாதகச்செயலை லுத்தர் நஞ்சென வெறுத்தார். இந்த அட்டூழியச் செயலை அறவே ஒழித்துக்கட்ட கங்கணம் கட்டினார். பாவ மன்னிப்புச் சீட்டு வியாபாரம் வேதாகமச் சத்தியத்திற்கு நேர் விரோதமானதென்று விட்டென்பர்க் தேவாலயத்திலே வீர முழக்கமிட்டு, தெத்செலின் ஈனச்செயலை வன்மையாகக் கண்டித்துப் பிரசங்கித்தார். தெத்செலின் பாவமன்னிப்பு சீட்டல்ல, கிறிஸ்துவின் இரத்தமே பாவமன்னிப்புப் பகர முடியுமென்று பகிரங்கமாய்ப் பறைசாற்றினார். ''தெத்செலிடம் பணம் கொடுத்துப் பாவமன்னிப்பு சீட்டுகளை வாங்கிக் கொண்டால்

வாழ்க்கை முழுவதும் என்ன பாவம் வேண்டுமானாலும் செய்துகொள்ளலாம் என்று இறுமாந்திருக்கிற மக்களே, ஏமாந்து போகாதீர். நீங்கள் மெய்யாகவே மனந்திரும்பி, கிறிஸ்துவினிடமிருந்து பாவமன்னிப்புப் பெற்று புனித வாழ்க்கையாற்றாவிட்டால், அழிந்தே போவீர்கள்'' என்று அறைகூவினார்.

தமது கோயில் பிரசங்கத்தால் மட்டும் காரியம் முடிந்து விடாதென்று கருதிய லுத்தர், பரிசுத்த வேதாகமத்திலிருந்து எழுத்துமூலமாய் எங்கும் உள்ள மக்களுக்குத் தெய்வ வாக்கையும் சத்தியங்களையும் வரைந்து காட்ட விரைந்தார். 1517-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் தேதியன்று சகல பரிசுத்தவான்களின் திருநாளை வெகு விமரிசையாகக் கொண்டாடும்பொருட்டு, மக்கள் திரள் திரளாக விட்டென்பர்க் தேவாலயத்தில் கூடுவதற்குச் சிறப்பான ஒழுங்குகள் செய்யப்பட்டன. அன்றைய சிறப்புக் கூட்டத்திற்கு இன்னும் ஒரு சிறப்பான காரணமும் இருந்தது. ஸ்தௌபிட்ஸ் நாடெங்கும் போய்ப் பெரும் முயற்சியோடு சேகரித்து வந்திருந்த எல்லாப் பரிசுத்தப் பண்டங்களும் அன்றைய தினம் பொது மக்களின் தரிசனத்திற்காக பொன் வெள்ளிப் பேழைகளில் திறந்து வைப்பதற்குத் திட்டமிட்டிருந்தார்கள். ஆகையால் பொது மக்களில் அநேகர் கூடி வரும் இந்த வேளையிலே விட்டென்பர்க் ஆலயத்தில் பாவமன்னிப்புச் சீட்டு வியாபாரம் வேத சத்தியத்திற்கு எவ்வளவு விரோதமானதென்பதைப் பலர் அறியப் பறைசாற்ற வேண்டுமென்று லுத்தர் தீர்மானித்தார். பாவமன்னிப்புச் சீட்டு விற்பனை செய்வது எவ்வளவு தவறான காரியம் என்பதற்குரிய நியாயங்களை எழுதி வெளியிட்டு, அதற்கு எதிர் நியாயம் கூறுவோரைத் தன்னிடம் வந்து வழக்காடிக் கொள்ளுமாறு சவால் விடுத்தார்.

அக்கால வழக்கத்தின் பிரகாரம் ஒரு பொருளைப்பற்றிப் பலர் வாதித்து ஒரு முடிவுக்கு வரவேண்டுமாயின், அறிஞர்கள் அக்காரியத்தைப்பற்றிய நியாயக் குறிப்புக்களை இலத்தீன் மொழியில் எழுதி வெளியிட்டு, அதற்கு எதிர் நியாயம் கூற

விரும்பும் அறிஞர்களை தர்க்கத்துக்கழைப்பார்கள். இம் முறையை லூத்தரும் பின்பற்றி, சகல பரிசுத்தவான்களின் திருநாளுக்கு முந்தின நாளாகிய, 1517-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 31-ஆம் தேதி பிற்பகலில் மக்கள் தேவாராதனைக்காக கூடிவரும் அரண்மனை ஆலயத்தின் வட புறக் கதவில் பண்டிதர்களுக்குரிய இலத்தீன் மொழியில், பாவமன்னிப்புச் சீட்டு வியாபாரத்தை எதிர்த்து தான் கூறும் 95 நியாயங்கள் கொண்ட ஓர் அறிக்கையை லூத்தர் ஒட்டி, ஆணி அறைந்தார். இந்தத் தீரச் செயல் ஜெர்மனி நாடெங்கும் பெரும் பரபரப்பை உண்டாக்கிற்று. இந்த 95 நியாயங்களை எழுதி லூத்தர் விட்டென்பர்க் ஆலயக் கதவில் ஆணி அறைந்து விளம்பரப்படுத்திய செய்தி நாடெல்லாம் பரவி, ரோமச் சபையையே ஒரு குலுக்குக் குலுக்கி, அசைத்து விடுமென்று லூத்தர் ஒரு வேளை அவ்வளவு ஆழமாய் அப்பொழுது நினைத்திருக்கமாட்டார். ஆனால் அவர் எண்ணியதைவிட அதிவேகமாய் அந்த நியாய அறிக்கை காட்டுத் தீபோல நாடெல்லாம் பரவிவிட்டது. அந்த அறிக்கையின் கீழே, ''இந்த நியாயங்களை வேதசாஸ்திர பண்டிதர் மார்ட்டின் லூத்தராகிய நான் எழுதியுள்ளேன். இவைகளைப்பற்றிப் பகிரங்கமாகத் தர்க்கிக்க விரும்புவோர் என்னிடம் நேரில் வந்து தர்க்கிக்கலாம்'' என்று தீட்டப் பட்டிருந்தது.

1517-ஆம் ஆண்டு அக்டோபர் 31-ஆம் தேதி விட்டென் பர்க் அரண்மனைத் தேவாலய ஆராதனைக்கு மாலையில் வந்த மக்கள் எல்லாரும் மார்ட்டின் லூத்தர் எழுதி ஒட்டி ஆணியடித்திருந்த 95 நியாயங்களையும் அறிந்துகொள்வதற்கு ஆவலோடு கதவுக்கெதிரிலே கூட்டம் கூடிவிட்டார்கள். அவை இலத்தீன் மொழியில் எழுதப்பட்டிருந்தமையின், இலத்தீன் கற்றிருந்த ஒரு மாணவன் அந்த நியாயங்களை ஜெர்மன் மொழியாக்கம் செய்து, மக்களுக்கு அறிவித்தான். வரவரக் கூட்டம் அதிகமாகிக்கொண்டேயிருந்தது. மென் மேலும் உரத்த சத்தத்தில் ஜெர்மன் மொழியில் அந்த நியாயங்களை மொழிபெயர்த்துக் கூறவேண்டியதாயிருந்தது.

அம்மாணவன் களைத்துப்போனவுடன் இன்னொரு மாணவன் முன்வந்து ஜெர்மனியில் மொழிபெயர்த்தான். மக்கள் வெகு ஆர்வத்தோடும், பரபரப்போடும் லூத்தர் தந்த நியாயங் களைக் கருத்தாய்க் கேட்டுக்கொண்டிருந்தனர். திருவிழா முழுவதும் இதே பேச்சுதான். கல்லூரி மாணவர் இந்நியாயங் களை ஜெர்மன் மொழியில் அச்சிட்டு வெளியிட்டனர். பாவ மன்னிப்புச் சீட்டுகளைப் பணம் கொடுத்து வாங்க வந்தவர் கள் பாவமன்னிப்புச் சீட்டு வியாபாரத்தைக் கண்டித்து லூத்தர் வெளியிட்டிருந்த நியாயங்களை வாசித்து, நகல்கள் எழுதிக் கொண்டு போய் வீடுகளில் வைத்து அவற்றை மீண் டும் வாசித்து ஆழ்ந்து சிந்தித்தார்கள். அந்நியாயங்கள் சத்தியமானவையே என்று அறிந்து கொண்ட மக்கள் அவற்றைத் தங்கள் ஊரெல்லாம் பரப்பினார்கள்; அக்கம் பக்கத்து ஊரெல்லாம் பறையறைந்தார்கள். அச்சடிக்கப் பட்ட இந்த 95 நியாயங்களும் சில மாதங்களுக்குள் ஜெர்மனி நாடு முழுவதும், ஐரோப்பாவின் பல பாகங்களிலும் பரவி விட்டன. இவை பரவிச் சென்ற வேகத்தைக் கவனித்த ஒரு நண்பர், தேவ தூதர்களே தபால்காரராயிருந்து இவற்றை நாடெல்லாம் விளம்பரப்படுத்தியிருக்கவேண்டுமென்று தமது அபிப்பிராயம் தெரிவித்துள்ளார்.

லூத்தர் பறைசாற்றிய 95 நியாயங்களின் மொத்த சாரம்: ''இயேசு கிறிஸ்துவை பற்றும் விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான். இயேசு கிறிஸ்துவைத் தன் சொந்த இரட்சகராக விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவன் இரட் சிக்கப்படுகிறான். இயேசு கிறிஸ்துவின் இரத்தம் மட்டுமே நமது சகல பாவங்களுமற நம்மைக் கழுவிச் சுத்திகரிக்கும். பாவமன்னிப்புக் சீட்டுகளைப் பணம் கொடுத்து விலைக்கு வாங்கிக்கொள்வதால் பாவமன்னிப்பு உண்டாகாது. யார் ஒருவர் தங்கள் பாவங்களுக்காக உண்மையாய் மனஸ்தாபப் பட்டு மனந்திரும்பி, இயேசு கிறிஸ்து கிருபையாய் இலவச மாகத் தரும் பாவ மன்னிப்பை விசுவாசக் கரம் நீட்டி வாங்கிக்கொள்கிறார்களோ அவர்களுக்கு மட்டுமே பாவ

மன்னிப்புக் கிடைக்கும். கிறிஸ்துவின் இரத்தத்தால் கழுவப்பட்ட ஒரு விசுவாசியின் இருதயத்தில் பரிசுத்தாவியானவர் வாசம் பண்ணுகிறபடியால், பரிசுத்த தெய்வம் அவனுக்குள் இருந்து, பரிசுத்த செயலாற்றி வருகிறார். எனவே ஒரு விசுவாசி கிறிஸ்துவுக்குள் மனந்திரும்பிய புது சிருஷ்டியாகப் பரிசுத்த கிறிஸ்தவ வெற்றி வாழ்க்கை நடத்த அழைக்கப்பட்டிருக்கிறான். நம்முடைய ஆண்டவர் பரிசுத்தராயிருக்கிறது போல அவரது அடியாரும் பரிசுத்தமுள்ளவராக இருக்க வேண்டுமென்பதே தேவனுடைய சித்தம். இதுவே கிறிஸ்தவ வேத சத்தியம். இதுவே கிறிஸ்தவ மார்க்கத்தின் அடிப்படை வாழ்க்கை நெறி. இதை விட்டுவிட்டு. தங்கள் மனம் போன படி அசுத்த வாழ்க்கையாற்றுவதற்குத் துணிகரமாய் இடங் கொடுக்கும் பாவ மன்னிப்புச் சீட்டு வியாபாரம் கிறிஸ்தவ மார்க்க சத்தியத்திற்கு நேர் விரோதமானது. ஆண்டவர் தமது சொந்த இரத்தம் சிந்திச் சம்பாதித்து இலவசமாய் வழங்கும் பாவ மன்னிப்பைப் பணத்திற்கு விற்று வியாபாரம் செய்வது தேவனுக்கு விரோதமான பாதகச் செயல். அது அருவருக்கத்தக்கது; கொடிய விஷம் போன்றது; அடியோடு ஒழிக்கப்பட வேண்டியது.''

லூத்தர் விட்டென்பர்க் ஆலயக் கதவில் இந்நியாய அறிக்கையை எழுதி ஒட்டி ஆணி அறைந்த வீர தீரச் செயல் கள்ளப் போதகங்களுக்கும், வீண் மார்க்கச் சடங்காச்சாரங்களுக்கும், போலி பக்தி மார்க்கத்திற்கும், பாவமன்னிப்புச் சீட்டு வியாபாரத்திற்கும் சாவுமணி அடித்தது போலாகி விட்டது. ஆம், இதனால் ஆல்பிரெக்ட், தெத்செல்மூலமாய் நடத்தி வந்த பாவமன்னிப்புச் சீட்டு வியாபாரம் படுதோல்வியடைந்து மண்ணைக் கவ்வியது. ஆகவே, ஆல்பிரெக்ட் தனது வியாபாரம் பெருத்த நஷ்டமடைந்ததைப்பற்றிப் போப்பானவரிடம் முறையிட்டான். அகுஸ்தீன் நெறியாளருக்கும் தொமினிக்க நெறியாளருக்கும் இடையே அடிக்கடி பொறாமையும் அபிப்பிராயப் பேதமும் எழுவதுண்டு. தெத்செல் தொமினிக்க வகுப்பைச் சேர்ந்தவன். லூத்தரது நியாய அறிக்கை வெளியீட்டால் தெத்செலுக்கு பெரும் அவமானம்

ஏற்பட்டதைத் தங்களுக்கு நேர்ந்ததைப்போல நினைத்து ஆல்பிரெக்டின் புகாரை ஆதரித்து, லூத்தர் வெளியிட்டுள்ள நியாய அறிக்கை கள்ளப்போதகமென்று போப்பானவரிடம் மனு செய்துகொண்டனர்.

லூத்தருக்கு விரோதமாக நடந்த இவ்வழக்கு ரோமை நகரில் மூவாண்டு காலம் நீடித்து நடைபெற்று வந்தது. பாவமன்னிப்புச் சீட்டு வியாபாரத்தைக் கண்டனம் செய்து, அதற்கேற்ற நியாய அறிக்கையை லூத்தர் வெளியிட்டபோது, போப்பானவரையாவது போப்பு மார்க்கத்தையாவது அவர் எதிர்த்துத் தகர்க்கவேண்டுமென்று எண்ணியதில்லை. அடுத்த ஆண்டு வசந்த காலத்தில் இந்த 95 நியாயங்களுக்கும் அவர் ஒரு விளக்கவுரை தயாரித்து, அதை பத்தாம் லியோ போப்பானவருக்கு அர்ப்பணம் செய்து, அச்சிட்டு வெளியிட்டார். பிராண்டன்பர்க் அத்தியட்சருக்கு அதில் ஒரு பிரதி அனுப்பினார். தமது நண்பரான ஸ்தௌபிட்ஸ் பண்டிதர்மூலமாகப் போப்பானவருக்கும் அதில் ஒரு பிரதியும் அத்துடன் ஒரு கடிதமும் சேர்த்தனுப்பினார். அக்கடிதத்தின் போக்கு லூத்தர் என்னதானிருந்தபோதிலும், போப்பானவருக்குக் கொடுக்க வேண்டிய மரியாதையை எவ்வளவு கௌரவத்தோடு கொடுத்து வந்தார் என்பது அறியக்கிடக்கிறது. ''இம் மண்ணுலகில் கிறிஸ்துவின் பிரதிநிதிப் பதவியேற்றுள்ள பரிசுத்த தந்தையே, நான் எழுதினதை மறுதலிக்க முடியாது. உம்முடைய விருப்பப்படி என் உயிரை எடுத்தாலும் சரி, கொடுத்தாலும் சரி, என் அறிக்கையை அங்கீகரித்தாலும் சரி, மறுத்தாலும் சரி, என்ன செய்தாலும் சரி, அது உமது விருப்பம்'' என்றெழுதினார்.

மார்ட்டின் லூத்தருடைய வணக்கமான மனுவுக்குப் போப்பானவரிடமிருந்து பதில் வரவில்லை. ஆனால் மார்ட்டின் லூத்தர் நேரில் போப்பானவரைக் கண்டு, அவர் வெளியிட்டுள்ள வேதப் புரட்டுகளுக்கு விளக்கம் தருமாறு அழைக்கப்பட்டார். ஆனால் நியாயமும், நீதியும், அன்பும் படைத்த நியமுகப் பிரபுவாகிய பிரட்ரிக் இளவரசருக்கு இது நியாய

மாகத் தோன்றவில்லை. இந்த வழக்கு ரோமாபுரியிலல்ல, ஜெர்மனி நாட்டிலேயே விசாரிக்கப்பட வேண்டுமென்று போப்பானவரோடு மன்றாடினார்.

அதன் விளைவாக, போப்பானவர் தனக்குப் பதிலாக கயத்தான் **(Cajetan)** என்னும் பிரதிநிதியை அனுப்பி, லூத்தரை ஆக்ஸ்பர்கில் விசாரணை செய்யுமாறு ஒழுங்கு செய்தார். லூத்தர் கர்த்தரின் பேரிலுள்ள விசுவாசத்தால் அஞ்சா நெஞ்சம் படைத்தவராய், கால் நடையாகவே நடந்து அக்டோபர் மாதம் ஏழாம் தேதியன்று ஆக்ஸ்பர்கில் சேர்ந்தார். உடனே, கயத்தான் தன் புகழ்பெற்ற வேவுகாரனாகிய உர்பனை லூத்தரிடம் அனுப்பி, அவன் தன்னுடைய சமர்த்தையெல்லாம் காட்டி, லூத்தர் தான் வெளியிட்ட நியாய அறிக்கையை மறுதலிக்கச் செய்யுமாறு தூண்டினான். உர்பன் லூத்தரோடு நயவஞ்சகமாக வாதாடி, ''மறுதலிக்கிறேன்'' என்ற ஒரு வார்த்தையை மட்டும் லூத்தர் சொல்லிவிட்டால் எல்லாம் சமாதானமாய் முடிந்துவிடுமென்று தந்திரமாய்ச் சொல்லிப் பார்த்தான். ஆனால் விசுவாச வீரச் சிங்கமாகிய லூத்தர் அவனுடைய அச்சுறுத்தலுக்கோ, ஆசை வார்த்தைகளுக்கோ சிறிதும் இணங்காமல், ''சத்தியம் சத்தியமே, நான் கூறினது சத்தியத்திற்கு விரோதமானதென்று சத்திய வேதாகமத்தைக் கொண்டு நீ நிரூபித்துக் காட்டமுடியுமா?'' என்றார். உடனே உர்பன் உர்ரென்று கோபங்கொண்டு, ''எல்லாராலும் கைவிடப்பட்டுப் புறக்கணிக்கப்பட்டால், உனக்கு அடைக்கலம் தருவதார், பார்க்கலாம்'' என்று சினந்து கூறவே, லூத்தர் விண்ணுலகைச் சுட்டிக் காட்டி, ''விண்ணுலகக் கர்த்தர் என் அடைக்கலமும் கோட்டையுமானவர்'' என்றார். இதைக் கேட்ட உர்பன் லூத்தரை விட்டு வெடுக்கெனப் போய்விட்டான். லூத்தருக்கு அரசனிடமிருந்து உயிர்க்காப்பு உறுதிச் சீட்டு வந்தது. லூத்தர், லிங் பண்டிதருடன் கயத்தானிடம் சென்றார்.

முறைப்படி ஒருவரையொருவர் வாழ்த்திக் கொண்டனர். பின்னர் நெடுநேரம் கயத்தான் லூத்தரோடு பேசாது

அமைதியாயிருக்கவே, லூத்தர் முதலாவது பேசத் தொடங்கி, தாம் வெளியிட்டுள்ள நியாய அறிக்கை சம்பந்தமாய்ப் போப்பானவரின் தீர்ப்புதனை அறிந்து போகுமாறு வந்திருப்பதாகக் கூறினார். அப்பொழுது கயத்தான் வாயைத் திறந்து, ''நீ போப்பானவரை மகா கனம் மிக்க பரிசுத்த தந்தையாக ஒப்புக்கொண்டால், நான் கூறும் வார்த்தைகளைக் கூர்ந்து கேட்டு கௌரவிப்பாயாக : (1) நீ வெளியிட்டுள்ள புரட்டுகளை மறுதலிக்க வேண்டும். (2) நீ இனிமேல் உன் சொந்த அபிப்பிராயங்களை வெளியிடக்கூடாது. (3) நீ திருச்சபையின் சமாதானத்தைப் பங்கப்படுத்தக்கூடிய எல்லாவற்றையும் விலக்க வேண்டும்'' என்றான்.

இவற்றை கேட்ட லூத்தர் தாம் புரிந்துள்ள தவறுகள் எவை என்று சுட்டிக்காட்டும்படி வேண்டிக்கொண்டார். கயத்தான் கூறியவைகளுக்கெல்லாம் எதிர் நியாயம் சத்திய வேதாகமத்திலிருந்து லூத்தர் எடுத்துக்காட்டவே, கயத்தான் வாயடைத்துப் போனான். அவன் ஸ்தௌபிட்ஸ் பண்டிதரை நோக்கிப் பார்த்து : ''நான் இனி இந்த லூத்தர் மிருகத்தோடு தர்க்கிக்க முடியாது. அவன் கண்கள் கூரியவை. அவன் அறிவு ஆச்சரியமானது; ஆழமானது; பிரமாண்டமானது'' என்று மொழிந்தான். எனினும் தனது கௌரவத்திற்கு இழுக்கு ஏற்படாதவாறு பார்த்துக்கொள்வதற்காக அவன் அதிக ஆணவத்தோடு லூத்தரைப் பார்த்து, ''நீ மறுதலித்து விடு, இன்றேல் நீ மீண்டும் வரவேண்டாம்'' என்று கோபாவேசமாய்க் கூறினான். தர்க்கத்தில் லூத்தரைத் தோற்கடிக்க வேண்டுமென்றால் தான் இன்னும் அதிக நுட்பமாய்த் திருமறையை வாசித்து ஆராய்ச்சி செய்தாக வேண்டுமென்ற முடிவுக்கு வந்தான் கயத்தான்.

ஆத்தும இரட்சிப்புக்கடுத்த காரியத்தில் போப்பானவருக்கும் முடிவான அதிகாரமில்லையென்று தெளிவாக்கினார் லூத்தர். பின்னர் லைப்சிக் (Leboig) என்னும் மாநகரில் லூத்தரோடு தர்க்கம் செய்து, போப்பு வாக்கே தெய்வ வாக்கு என்று நிறுவுவதற்காக போப்பானவர் தமது

திறமை மிக்க கல்விக் களஞ்சியமான டாக்டர் எக் (Dr. Eck) என்ற பேரறிஞனை அனுப்பினார். லைப்சிக் மாநகர் கேயாக் பிரபுவின் ஆளுகைக்குட்பட்டிருந்தபடியால், அவர் இச்சொற் போரில் பெரும் ஆர்வமுற்று, பினை சென்பர்க் என்னும் அரண்மனையை அலங்கரித்து இச் சொற்போருக்குக் கோலா கலக் காட்சியோடு திகழுமாறு சிறந்த ஒழுங்குகள் செய்தார். கார்ல்ஸ்டால் மேதை தலைமை தாங்கினார். 1519-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 4-ஆம் தேதி இப்புரட்சிகரமான வீரச்சொற் போர் ஆரம்பமானது. டாக்டர் எக் என்பவர் போப்பாண்ட வர்தான் திருச்சபையின் தலைவரென்றும், கிறிஸ்துவின் பிரதிநிதியாகிய போப்பாண்டவரின் சொல்தான் தெய்வச் சொல் என்றும், போப்பாண்டவர் தவறக்கூடாதவர் என்றும் வெகு தீர்க்கமாய் வாதாடினார். முப்பத்தைந்து வயதுடைய லூத்தர் கம்பீரமாய்ப் பீடத்தினின்று, ''திருச்சபையின் தலைவர் இயேசு கிறிஸ்துதான். போப்பானவரின் செல்வாக் கும், அதிகாரமும் மனித ஏற்பாடுதான். கிறிஸ்துவின் வாக்கு தான் திருச்சபை ஏற்கவேண்டிய வாக்கு. கிறிஸ்துவின் வாக்கைச் சத்திய வேதம் எடுத்தியம்புகிறது. எனவே, சத்திய தேவ வசனமே, சத்திய வேதாகமமே, திருச்சபை சிரசின்மேல் கொள்ளவேண்டிய தெய்வ வாக்கு. கிறிஸ்துவின் வாக்கிற்கு, தேவ வசனத்திற்கு விரோதமாகக் கூறும் எந்த மனித னுடைய கூற்றையோ, சபையின் கூற்றையோ, கூட்டத்தின் கூற்றையோ, பொதுக்கூட்டத்தின் கூற்றையோ நாம் அங்கீ கரிக்க முடியாது. சத்திய வேதத்திற்கு விரோதமாக யாரொருவர் எச்செயலைச் செய்தாலும், நாம் அதை அங்கீ கரிக்க முடியாது. நாம் விசுவாசித்துக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டிய கர்த்தர் ஒருவரே. அவர் இயேசு கிறிஸ்து. அவரது சொல்தான் நமக்குத் தெய்வச் சட்டம். அவரது ஆணைதான் நமக்கு வேதம். அவர்தான் நமக்கு இரட்சிப்பு, அவரது இரத்தம்தான் நமக்குப் பாவமன்னிப்பு. கிறிஸ்துவின் ஆவி யானவர்தாம் நமக்கு ஜீவ வாழ்வு. கிறிஸ்துவைப் பின்பற்றி நடப்பதுதான் நமது மேன்மை. கிறிஸ்துதான் நமது தலைவர். கிறிஸ்துதான் நமது வழிகாட்டி, கிறிஸ்துதான் நமது வழி

கிறிஸ்துதான் நமது சத்தியம். கிறிஸ்துதான் நமது ஜீவன்'' என்று வீர முழக்கமிட்டார்.

உடனே எக் என்பவன் எக்காளமிட்டு, ''விக்கிளிப், ஹஸ் (Huss) போன்ற பதிதர் போப்பாண்டவரை எதிர்த்ததுபோலவே நீயும் போப்பாண்டவரை எதிர்த்து நிற்க அவ்வளவு துணிச்சலுற்றாயோ?'' என்று முழங்கினான். அப்பொழுது லுத்தர் அதிகத் தைரியத்தோடு, ''விக்கிளிப் சொன்னாலும் சரி, ஹஸ் சொன்னாலும் சரி, எல்லாம் ஒன்றுதான். சத்தியம் சத்தியமே'' என்று முழக்கமிட்டார். கேட்டோர் எல்லாரும் திடுக்கிட்டார்கள். அதனைக் கேட்டுக் கொண்டிருந்த கேயோர்க் பிரபு கோபத்தீ பொங்க, ''உன்னைக் கொடுங்காய்ச்சல் வாரிக்கொண்டு போவதாக'' என்று சாபம் கூறினான். ''ஹஸ் என்ற பதிதனுக்குக் கிடைத்த அதே கதிதான் உனக்கும் கிடைப்பதாக'' என்று எரிந்து விழுந்தான். ''கிறிஸ்துவின் நாமத்திற்காகவும், வேத சத்தியத்திற்காகவும் நான் உயிர் கொடுக்கவும் தயார்'' என்று மார்தட்டி நின்றார் மாவீரர் மார்ட்டின் லுத்தர்.

லுத்தரது வீர மொழிகளைக் கேள்வியுற்ற சில உத்தமர்கள் லுத்தருக்குக் கடிதம் எழுதி அவரைக் கிறிஸ்துவுக்குள் பாராட்டித் தைரியமூட்டினார்கள். 1519-ஆம் ஆண்டு அக்டோபர் மூன்றாம் தேதி பிரேக் மாநகரிலிருந்த யோவான் படுஷ்க்கா வென்செலாவுஸ், ரோஸ்டியோலோவின்ஸ் என்ற இரு குருமாரும் லுத்தருக்கு மடல் தீட்டிப் பின்வருமாறு ஊக்குவித்தார்கள்: ''உம்முடைய நியாய அறிக்கையையும், விளக்கவுரையையும், நூல்களையும் அதிக மகிழ்ச்சியோடு வாசித்தோம். அவை சத்தியம். நீர் சத்தியத்திற்காகக் கிறிஸ்துவுக்குள் உறுதியாய் இறுதிவரை நிலைத்திருப்பீராக. பொகிமியாவுக்கு ஹஸ் என்பவர் எப்படிச் சிறந்த கிறிஸ்தவ வீர சிங்கமாகத் திகழ்ந்தாரோ அப்படியே மார்ட்டின் லுத்தராகிய நீர் சக்ஸோனியாவுக்குக் கிறிஸ்தவ வீரச் சிங்கமாகத் திகழ்கிறீர். பொகிமியா நாட்டுக் கிறிஸ்தவர்கள் உம்மை வெகு ஊக்கமான ஜெபத்தால் ஆதரித்துத் தாங்கி வருகிறார்கள்.''

லைப்சிக் மாநகரில் நிகழ்ந்த தர்க்கத்திற்குப் பின்னர் எக் என்பவன் லூத்தரை பதிதனாக்கிப் பழிவாங்க சூழ்ச்சி செய்தான். போப்பு மார்க்கத்தை ஆதரித்துப் போப்பாண்டவரைப் போற்றி, மார்ட்டின் லூத்தரைத் தூற்றி ஒரு நூலை தோற்றுவித்து, அதில் ஒரு பிரதியைப் போப்பாண்டவருக்கு நேரில் பரிசளிப்பதற்கு ரோமை நகர் சென்றான். லூத்தரது போப்பு மார்க்கக் கண்டனங்களைக் கேள்வியுற்ற போப்புவுக்கு அடங்கா சினம் ஏற்பட்டது. லூத்தரைப் பதிதனாக ரோமச் சபைக்குப் புறம்பாக்கிச் சபிக்குமாறு கார்டினல் அக்கோல்டி என்பவன் ஓர் ஆக்கினைப் பத்திரம் தயாரித்தான் போப்பானவர் ஏவுதலின் பேரில். நான்கு கரும கர்த்தர் சபைகளில் பல திருத்தங்களுடன் அது அங்கீகார முத்திரை பெற்றது. 1520-ஆம் ஆண்டு ஜூன் 16-அம் தேதி பத்தாம் லியோவாகிய போப்பானவர் இந்த ஆக்கினைப் பத்திரத்தில் எக் என்பவன் கண்டுகளிக்க கையொப்பமிட்டார். இதன்படி மார்ட்டின் லூத்தர் பதிதரெனத் தீர்ப்புப் பெற்றார். லூத்தரது நூல்கள் சுட்டெரிக்கப்பட வேண்டுமெனப் போப்பு ஆணை பிறந்தது. லூத்தரது வெளியீடுகளில் உள்ள நாற்பத்தோரு குற்றங்களை லூத்தர் அறுபது நாள்களுக்குள் மறுதலிக்காவிட்டால், அவரை ரோமச் சபைக்குப் புறம்பாக்க வேண்டுமென்று தீர்ப்புப் பிறந்தது.

அறுபது நாள் தவணையின் இறுதி நாள் அதிகாலையில் விட்டென்பர்க் பல்கலைக் கழகத்திலிருந்த லூத்தரின் நண்பராகிய மெலாங்தோன் (Melanchthon) ஒரு விளம்பர அறிக்கை தீட்டி, அந்நகர் ஆலயத்தில் ஒட்டுவித்தார். அதன் பிரகாரம் வேத சத்தியத்தில் வாஞ்சை கொண்ட அனைவரும், தொத்து நோயால் இறந்தோரின் துணிகளைத் தீக்கிரையாக்குமிடத்தில், போப்புவின் தெய்வ பயமற்ற அதிகார ஆணையையும் சடங்காச்சாரப் புத்தகங்களையும் சுட்டெரிப்பதற்கென்று காலை ஒன்பது மணிக்குக் கூடிவருமாறு அழைப்பு விடுக்கப்பட்டிருந்தது. அவ்வாறே ஒரு பெருங் கூட்டம் திரண்டு வந்தது. விறகு கட்டைகளை அடுக்கி அதன்மேல் போப்பு

வின் வேத ஆதாரமற்ற அதிகார வியாக்கியான வீண் சடங்காச்சார நூல்களையெல்லாம் லூத்தர் குவித்தார். ஒரு வேதப் பண்டிதர் அப்போப்பு சடங்காச்சார அதிகார ஆணை நூல்களுக்குத் தீயிட்டார். அந்நூல்கள் கொழுந்துவிட்டெரியுங்கால் லூத்தர் வீர தீரனாய் முன் வந்து: ''நீ தெய்வ சத்தியத்தை அழித்தபடியால், இந்த நெருப்பு உன்னை அழிப்பதாக, ஆமென்'' என்று வீர வெற்றி முழக்கமிட்டு, போப்புவின் ஆக்கினைப் பத்திரத்தை அந்நெருப்புக்கு இரையாக்கினார். இவ்வாறு போப்பு மார்க்கத்தைவிட்டு வெளியேறி சுத்த சுவிசேஷத்திற்காக, கிறிஸ்து மார்க்கச் சத்தியத்திற்காகத் தன் வாழ்க்கையையே காணிக்கையாகப் படைக்க முன் வந்தார் மாசிறந்த கிறிஸ்தவ விசுவாச வீரராகிய மார்ட்டின் லூத்தர்.

போப்பானவர் தனது பிரதிநிதியாக ஆலெண்டர் **(Alender)** என்பவரை ஜெர்மனி நாட்டிற்கு அனுப்பி, லூத்தர் எழுதிய நூல்களையெல்லாம் சுட்டெரிக்க கட்டளையிட்டார். மேலும் அவர் சார்லஸ் அரசனை அண்டி, அவ்வரசனுடைய ஆளுகைக்குட்பட்டிருந்த லூத்தரை மரண ஆக்கினைத் தீர்ப்புக்கு உட்படுத்தும் ஓர் அதிகாரப் பத்திரத்தை அந்த அரசனிடமிருந்து எப்படியாவது பெற்று வருமாறு பணித்திருந்தார். ஆனால் சார்லஸ் அரசன் நியமுகப் பிரபுவாகிய பிரட்ரிக் இளவரசனைப் பிரியப்படுத்த மனதுள்ளவனாய் லூத்தரைத் தீர விசாரித்தறியும்முன் மரண ஆக்கினைக்குட்படுத்துவது நியாயமோவென்று வாதாடினார். பிரட்ரிக் இளவரசன் மார்ட்டின் லூத்தர்பால் அன்பும் கவுரவமும் கொண்டிருந்தார். எனவே பிரட்ரிக் இளவரசனது மனதை மாற்றினாலன்றி தனது காரியம் பலிக்காதென்று அறிந்துகொண்ட ஆலெண்டர் பிரட்ரிக் இளவரசனிடம் சென்று, அவர் மனத்தை மயக்கி, லூத்தரையும் அவரது நூல்களையும் சுட்டெரிப்பதற்கு அவரது இணக்கத்தையும் பெற்றுவிடலாமென்று எவ்வளவோ முயன்றான். ஆனால் அவனது முயற்சி பலிக்கவில்லை. பிரட்ரிக் வெகு ஞானமாய்க்

கீழ்க்கண்டவாறு பதிலளித்தார்:— "இக்காரியம் நினைத்த வுடனே நினைத்தவாறு செய்யக்கூடியதன்று. இதை ஆற தீர அமர்ந்து அரச சபையில் விசாரித்து வெகு பயபக்தியோடு முடிவு செய்ய வேண்டும். திடுமென தீர்ப்புக்கூறி லுத்தரை யும் லுத்தரது நூல்களையும் சுட்டெரிக்கத் துடித்து நிற்பது அடாத காரியம்" என்று எச்சரித்தார். மேலும் லுத்தர் அபாயமுன்றி பிரயாணம் செய்வதற்கு அவருக்கு ஓர் உயிர்க் காப்புப் பத்திரம் வழங்கப்படவேண்டுமென்றும், லுத்தர் தன் நியாயங்களை அறிவுமிக்க பாரபட்சமற்ற நியாயாதிபதிக ளால் ஆகிய ஓர் உயர்தர நீதிமன்றத்தில் நேரடியாக எடுத் துக் கூறுவதற்கு அனுமதியும் வாய்ப்பும் அளிக்கப்படவேண்டு மென்றும் முறையிட்டுக் கொண்டார்.

இதன் விளைவாக,மார்ட்டின் லுத்தர் 1521-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 17-ஆம் தேதி பிற்பகல் 4 மணிக்கு வொர்மஸ் **(Worms)** நகரிலுள்ள அரசாங்க சங்கத்திற்கு முன்பாக ஆஜராக வேண்டுமென்று ஐந்தாம் சார்லஸ் அரசன் கட்டளை யிட்டான். ஆலெண்டர் தூண்டுதலால் சார்லஸ் அரசன் லுத்தரது நூல்களையெல்லாம் சுட்டெரிக்க வேண்டுமென்று ஆணை பிறப்பித்தான். போப்புவால் பதிதனென்று சபைக்குப் புறம்பாக்கப்பட்ட ஒருவனை அரசாங்கத்தார் கொன்றுபோடு வது அக்கால வழக்கம். எனவே ஹஸ் **(Huss)** என்ற பாதக னுக்கும் சவொனரோலா **(Savonarola)** என்ற திருத் தொண்டருக்கும் நேர்ந்தவாறு தனக்கும் மரணத்தீர்ப்பு நேரிடுவது திண்ணம் என்பதை லுத்தர் திட்டவட்டமாக அறிந்திருந்தும், அஞ்சாநெஞ்சம் படைத்தவராய் வொர்மஸ் நகர் சென்று, கிறிஸ்தவ விசுவாசத்திற்காகச் சாட்சி பகர்ந்து, கிறிஸ்தவ சத்தியத்தை நிலைநாட்ட விரும்பினார். அதற் காகத் தமது உயிரையே பலியிடத் தயாரானார்.

ஸ்பாலத்தீன் **(Spalatin)** போன்ற நண்பர்கள் லுத்தர் வொர்மஸ் நகர் செல்ல வேண்டாமென்று எச்சரித்தபோது லுத்தர் சிறிதும் நயங்காமல் முழங்கியதாவது : "ஹஸ் சுட்டெரிக்கப்பட்டது உண்மையே. எனினும் சத்தியத்தைச்

சுட்டெரிக்க எவரால் இயலும்? இறுதியில் சத்தியமே வெல்லும். சத்தியம் ஒருகாலும் அழியாது. வொர்மஸ் மாநகரிலுள்ள வீடுகள் மேல் எத்தனை ஓடுகள் உண்டோ அத்தனை பேய்கள் அங்கேயிருந்தாலும் நான் அஞ்சாது அங்கே போய்தீர வேண்டும்'' என்றார்.

ஏப்ரல் மாதம் 2-ஆம் தேதி லுத்தர் தெய்வ பிரசன்னத் திற்காகவும், ஆசீர்வாதத்திற்காகவும் அதி ஊக்கமாய் ஜெபித்துவிட்டு வொர்மஸ் நகர் புறப்பட்டுவிட்டார். போகும் வழியில் மக்கள் திரண்டு வந்து அவருக்கு மரியாதை செய்து, அவரை ஊக்குவித்தார்கள். ஒரு நண்பர் அவர் அருகே அன்போடு வந்து, ''ஆத்துமாவை அல்ல, சரீரத்தை மட்டும் கொல்லக்கூடியவர்களுக்குப் பயப்படாதேயும்'' என்று அவரை ஆற்றித் தேற்றினார். இன்னொருவர் கனிவோடு கூறிய தாவது : ''என்னிமித்தம் நீங்கள் இராஜாக்களுக்கு முன்பாகக் கொண்டு போகப்படுவீர்கள். நீங்கள் அப்பொழுது என்னத் தைப் பேசுவோமென்றும், எப்படிப் பேசுவோமென்றும் கவலைப்படாதிருங்கள்; நீங்கள் பேச வேண்டுவது அந்நேரத் தில் உங்களுக்கு அருளப்படும். பேசுகிறவர்கள் நீங்களல்ல உங்கள் பிதாவின் ஆவியானவரே உங்களிலிருந்து பேசு கிறவர்'' என்பதே.

மற்றொரு நண்பர் லுத்தரைப் பார்த்து, எனதருமை நண்பரே, நீ வொர்மஸ் நகருக்குப் போகவேண்டாம். நீர் அங்குப் போனால் உம்மை உயிரோடே சுட்டுச் சாம்பலாக்கி விடுவார்களே என்று கண் கலங்கி நின்றார். அதற்கு லுத்தர் பின்வருமாறு விடையிறுத்தார்: – ''அவர்கள் விட்டென் பர்க்கிலிருந்து வொர்மஸ் நகரம்வரை நெருப்பு வளர்த்து அந்நெருப்பு வானளாவக் கொழுந்துவிட்டெரிந்தாலும், நான் அந்த அக்கினிச் சுவாலை வழியாய்ச் சென்று அரச சபையில் ஆண்டவருக்குச் சாட்சியாக நிற்பேன். நீர்யானை வரினும் நான் அதன் திறந்த வாயில் நுழைந்து அதன் பற்களுக்கிடை யினின்று இறைவன் இயேசு கிறிஸ்துவைப் பற்றிச் சாட்சி பகர்வேன்.''

மார்ட்டின் லுத்தர் அரச சபை கூடியிருந்த மாபெரும் மகத்தான மண்டபத்தில் பிரவேசித்தபோது, கெயோர்க் புருண்ட்ஸ்புர்க் என்னும் பிரபல போர் வீரர் அவருடைய தோளைத் தட்டிக்கொடுத்து, ''உமது விசுவாசம் உறுதி யானது. உமது போதகம் சத்தியமானது. நீர் கிறிஸ்தவ சத்தியத்திற்காகச் சாட்சிபகர கிறிஸ்துவின் நாமத்தில் இங்கு வந்துள்ளீர். கிறிஸ்து உம்மை ஒருகாலும், ஒருபொழுதும் கைவிடவே மாட்டார்'' என்று ஊக்குவித்தார்.

ஐந்தாம் சார்லஸ் அரசன் தலைமையில் முந்நூறு அதிபர் கள் குழுமியிருந்த அப்பிரமாண்டமான மண்பத்தில் 38 வயதுள்ள லுத்தர் அஞ்சாநெஞ்சராய் நின்றார். அங்கிருந்த அரசர், சிற்றரசர்கள், போப்பு பிரதிநிதிகள், அத்தியட்சர் கள், அமைச்சர்கள், பிரபுக்கள், அதிகாரிகள் முதலியவர் களுடைய முகத்தில் மமதையும், அதிகாரச் செருக்கும், சினத் தீயும் பொங்கி வழிந்துகொண்டிருந்தன. போப்பு பிரதிநிதி கள் லுத்தரை அன்றைய தினமே தீர்த்துக் கட்டிவிடவேண் டும் என்று துடித்தவர்களாய், உனது பிரசங்கம் தேவை யில்லை. இரு கேள்விகள் கேட்கிறோம். அதற்கு ஆம், இல்லை என்று இரண்டில் ஒன்று கூறினால் போதும். முதலாவது கேள்வி: — இப்புத்தகங்களெல்லாம் எழுதினது நீங்கள் அல்லவா? ''ஆம்'' என்று சொல்ல லுத்தர் வாயெடுக்கு முன், லுத்தரது நண்பர் குறுக்கிட்டு, ஆலெண்டர் அடுக்கி வைத்திருந்த புத்தகங்களின் தலைப்புகளை வாசித்துக் காட்டு மாறு கேட்டார். அப்புத்தகங்களின் தலைப்புகளை வாசித்து முடிக்க அதிக நேரம் ஆனது. அதற்குள் லுத்தர் சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு, பதற்றத்தை முற்றிலும் களைந்துவிட்டு தீர்க்கமாய்க் கணீரெனப் பதிலுரைக்கக் கூடியவரானார். அப் புத்தகங்களின் பெயர்கள் வாசிக்கப்பட்ட பின்னர் லுத்தர் தமது தலையை அசைத்து, அப்புத்தகங்கள் தான் எழுதியவை தான் என்று சொன்னார். இரண்டாவது கேள்வியாக எக் என்பவன், ''இப்புத்தகத்தில் நீ எழுதியுள்ள புரட்டுகளை மறுதலிக்கச் சம்மதம்தானா?'' என்று நறுக்கெனக் கேட்

டான். இக்கேள்வி லூத்தருக்கு பெரும் வியப்பை உண்டாக்கிற்று. காரணம், அவருக்கு அனுப்பப்பட்ட அழைப்புப் பத்திரத்தில் இக்காரியத்தைப் பற்றி ஒன்றும் குறிப்பிடப்பட வில்லை. அப்புத்தகங்களில் எழுதப்பட்டவை இரட்சிப்புக்கு இன்றியமையாதவை என்று லூத்தர் அறிந்திருந்தபடியால், வெறுமனே "இல்லை" என்று மட்டும் கூறி அன்றைய விசாரணையை முடிக்க விரும்பாது, நல்ல சூழ்நிலையில் அடுத்த நாள் வெகு ஆணித்தரமாய் தான் கூற விரும்பும் கிறிஸ்தவ சத்தியம் யாது என்பதை அழுத்தம் திருத்தமாய் அறைகூவ விரும்பியவராய், அக்கேள்விக்கு விடையிருக்கத் தனக்குத் தவணை கொடுக்கப்படவேண்டுமென்று சபையாரை விண்ணப்பித்துக்கொண்டார். மறுநாள் மட்டும் அவருக்குத் தவணை அளிக்கப்பட்டது. இவ்வாறு அவர் மீண்டும் ஓர் இரவு வெகு ஊக்கமாக ஜெபித்து பரிசுத்தாவியானவரின் ஆற்றலையும், கிறிஸ்தவ சமயத்திற்காகத் நெருப்பாக நிற்கும் அற்புதமான தைரியத்தையும் அடைந்துகொள்வதற்கு இத் தவணைக் காலம் பெரிதும் உதவியாயிருந்தது. இந்தப் பொன்னான வாய்ப்பை இயேசு கிறிஸ்துவே அருளிச் செய்தாரென்று வெகு திட்டவட்டமாகக் கூறினார். உலகச் சரித்திரத்தில் ஆண்டவர் குறுக்கிட்டுத் தமது சித்தம்போல அதை மாற்றிமைத்து, அவர் இராஜரீகம்பண்ணுகிறார் என்பதற்கு இத்தவணைக் காலம் நல்லதோர் எடுத்துக்காட்டாகும்.

அன்று இரவு மார்ட்டின் லூத்தர் செய்த ஜெபத்தின் மாண்புதனையும், வன்மைதனையும் அறிந்தோமானால், ஆண்டவர் கிருபையால் அருளிச் செய்துள்ள இத்தவணையின் மாட்சிதனை நாம் உணர்ந்துகொள்வோம். அன்றிரவு லூத்தர் விசுவாசத்தோடு அதி ஊக்கமாக ஜெபித்த ஜெபம், திருச்சபை வரலாற்றையே மாற்றியமைக்க ஏதுவாகிவிட்டது. அன்றைய ஜெபம் அடுத்தநாள் அதிசயமான ஜெயத்தைக் கொணர்ந்தது. இந்த ஜெபம் திருச்சபை வரலாற்று ஏட்டில் வைர எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய அற்புத சாதனையாகும். இந்த வல்லமையான ஜெபத்தை லூத்தர் வெகு உருக்கமாக

இவ்வையகமும் வானகமும் அதிர்ச்சியுறுமாறு செய்யும்போது, தெய்வாதீனமாக அடுத்த அறையிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த ஒருவர் அப்பிரார்த்தனையை எழுதி வைத்துள்ளார். திருச்சபை சீர்திருத்தத்திற்கு வித்திட்ட அவ்விண்ணப்பத்தின் சாரம் பின்வருமாறு :

''என் ஜீவனுள்ள கடவுளே! ஒன்றான மெய்த் தெய்வமே! எல்லாம் வல்ல இறைவன் இயேசு கிறிஸ்துவே! என் ஆண்டவரே; என் கடவுளே! என் இரட்சகரே! இவ்வுலக ஞானத்திற்கும் அறிவிற்கும் படுதோல்வி உண்டாகுமாறு என்னோடிரும். உம்மைப்பற்றிய விசுவாசம் உலகத்தை வெல்லுமாறு செய்ய என்னோடிரும். 'நானே சத்தியம்' என்று சொன்ன இயேசு கிறிஸ்துவே! சத்தியத்திற்காக நான் சாட்சி பகர, நீர் என்னோடிரும். சத்தியத்தை நிலைநாட்டியருளும். உம்மைப் பற்றும் விசுவாசத்தை எழுப்பியருளும். நீர் ஒருவரே மாந்தரை இரட்சிக்கக்கூடும் என்ற உண்மையை உலகம் அறியச் செய்தருளும், நீர் ஒருவரே இதைச் செய்யக் கூடியவர். மனித முயற்சி அல்ல, கர்த்தாவே, நீர் ஒருவரே இதைச் செய்ய வல்லவர். சாத்தானுடைய கோட்டைகளை நீர் ஒருவரே தகர்க்க வல்லவர். 'என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது' என்று சொன்ன இறைவன் இயேசு கிறிஸ்துவே! உம்மையல்லாமல் என்னால் ஒன்றும் செய்ய இயலாது. இக்காரியம் என்னுடையதல்ல. இந்தப் போர் உம்முடையதே. ஆண்டவரே, நான் என்னையோ அல்லது வேறெந்த மனிதனையோ நம்பி இத்திருப்போரில் இறங்கவில்லை. அப்படி நம்புவது வீணும் வியர்த்தமும் ஆகிவிடுமே. வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் உமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதே. 'இதோ, உலகத்தின் முடிவு பரியந்தம் உங்களோடிருக்கிறேன்' என்று சொன்ன கர்த்தாவே, என்னோடிருந்தருளும். சாத்தானையும் உலகத்தையும், மரணத்தையும் வென்றவரே, என்னோடிரும். 'உங்களைத் திக்கற்றவர்களாகவிடேன்' என்று சொன்ன

கடவுளே, பரிசுத்தாவியானவர்மூலமாக என்னோடிரும். இது உமது காரியம். இயேசுவின் திருநாமமே எனக்குக் கோட்டை, ஆதரவு, அடைக்கலம்! ஜீவனுள்ள மெய்க் கடவுளே! உமது காரியத்திற்காக என் உயிரையே அர்ப்பணம் செய்ய ஆயத்தமாயிருக்கிறேன். சத்தியத்திற்காக என் சரீரத்தைச் சுட்டெரிக்கப்பட ஒப்புக்கொடுப்பதற்கும் தயாரா யிருக்கிறேன். நான் உம்முடையவன். நீர் என்னுடையவர். நீர் என் தெய்வம். நீர் என் இரட்சகர், நீரே எனக்குத் துணை. என்னோடு இரும். மாநேசக் கர்த்தாவே, ஆமென்.''

1521-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 18-ஆம் தேதியாகிய மறுநாள் இரண்டாம் முறையாக மீண்டும் அரசர் மாமன்ற மண்டபத்தில் மார்ட்டின் லுத்தர் மாபெரும் கிறிஸ்தவ விசுவாச வீரசிங்கமாய் வீரவெற்றி முழக்கமிட்டார். கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தின் அருமையையும், மேன்மையையும் விளக்கிக் காட்டினார். சத்திய வேதாகமத்தின் அதி முக்கியத்துவத்தைப்பற்றி விரித்துரைத்தார். மனிதனல்ல, மனிதனாலும் அல்ல, மனித முயற்சியாலும் அல்ல, மனித கிரியைகளினாலும் அல்ல, இறைவன் இயேசு கிறிஸ்துவால் மட்டுமே மனிதன் இரட்சிக்கப்படுகிறான் என்ற சத்தியத்தைப்பற்றி தெள்ளத்தெளிய இலத்தீனிலும், ஜெர்மன் மொழியிலும் ஏறத்தாழ இரண்டு மணி நேரம் அருளுரையாற்றினார்.

இவ்வீர முழக்கங் கேட்டுக் கோபாவேசம் கொண்ட எக் என்பவன் சத்தியத்தை நிலைநாட்டிய கிறிஸ்தவ விசுவாச வீரராகிய லுத்தரைப் பார்த்து, ''உமது பிரசங்கத்தை நிறுத்தி, இரண்டில் ஒரு பதிலை மட்டும் சொன்னால் போதும், நீர் எழுதியவைகளை மறுதலித்துவிட உமக்குச் சம்மதம் இல்லையா?'' என்றான். அப்பொழுது மார்ட்டின் லுத்தர் தமது திருப்போரின் உச்சக்கட்டத்தை அடைந்தவராய், வெகு உறுதியோடு ஆணித்தரமாக: ''நான் எழுதியவை சத்திய வேதாகமத்திற்கு விரோதமானவை என்று உங்களில் யாராவது நிரூபித்துக் காட்டினால், எனது புத்தகங்களை

நானே முதலாவது உங்கள் முன் சுட்டெரிக்கத் தயாராயிருக்கிறேன். நான் எழுதியவை அத்தனையும் சத்திய வேதாகம உண்மையை ஆதரமாகக் கொண்டவை. நான் மனித வாக்கை ஆதாரமாகக்கொண்டு என் நூல்களை எழுதவில்லை. கிறிஸ்துவின் ஆவியானவராலும், கிறிஸ்துவின் வசனத்தாலும் ஆண்டு நடத்தப்படாத போப்புவின் வாக்கையோ, சங்கங்களின் தீர்ப்பையோ நான் ஏற்கத் தயாராயில்லை. போப்புவும் அவரது சங்கங்களும் பல தடவைகளில் தவறி வீழ்ந்து மாறுபாடு செய்துள்ளதையெல்லாம் நாம் அறிவோமே. பேசப்புவும் பொதுச் சங்கங்களும் முன் சொன்னவற்றைப் பின் மாற்றியிருப்பதும் நாம் அறிந்த காரியமே. எனவே அவர்களை மட்டுமே நான் எப்படி நம்பமுடியும்? தேவ வசனத்திற்கும், கிறிஸ்துவின் ஆவியானவரால் வழி நடத்தப்படும் என் மனச்சாட்சிக்கும், கட்டுப்பட்டவனாய் இப்புத்தகங்களை எழுதியுள்ளேன். இவை சத்திய வேதாகமத்தை அடிப்படையாகக் கொண்ட சத்தியம். இதில் ஒரு வார்த்தையும்கூட மறுதலிக்கவோ மாற்றவோ மாட்டேன். நான் இங்கு விசுவாச சத்தியத்திற்காக நிற்கிறேன் (Here I stand). கிறிஸ்துவே எனக்குத் துணை! ஆமென்'' என்று வெற்றி முரசு கொட்டினார்.

கிறிஸ்தவ விசுவாச சத்தியத்திற்காக மார்ட்டின் லூத்தர் வீரதீரமாக நின்ற மகத்தான சாதனை திருச்சபை வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ளது. இந்த அரிய பெரிய சாதனை திருச்சபைச் சரித்திரத்திற்குப் புரட்சிகரமான திருப்பம் அளித்துவிட்டது; திருச்சபை போக்கு மாற்றியமைக்கப்பட்டது; திருச்சபை சீரமைப்புப் பெற்றது; சீர்திருத்தம் உண்டானது; விசுவாச சுவிசேஷ கிறிஸ்தவ சபைகள் துளிர்த்தன; சடங்காச்சார போப்பு மார்க்கத்தை எதிர்த்து, மறுக்கும் கிறிஸ்தவ விசுவாச சபை (Protestant Church) மலர்ந்தது. உலகமெங்கும் கிறிஸ்தவ சுவிசேஷமும், கிறிஸ்தவ வேதாகமமும் வழங்கப்படுவதற்கு வழிவகை பிறந்தது. கிறிஸ்துவைப் பற்றும் உங்கள் விசு

வாசமே உலகத்தை ஜெயிக்கிற ஜெயம் என்ற கிறிஸ்துவின் வாக்கு அப்படியே பலித்துவிட்டது. இயேசுவின் இனிய நாமம் என்றும் வாழ்க! .

கர்த்தர் லூத்தரோடு கூடயிருந்தார். பகைவர் அவரது உயிரை வாங்கவேண்டும் என்ற நோக்கமாய் அவரை நாட்டிற்கும் சபைக்கும் புறம்பாக்கிய போதிலும், பராபரன் அவரது உயிரை அற்புதமாகக் காப்பாற்றியருள சித்தங் கொண்டார். லூத்தர் விட்டென்பர்க் போகும் வழியில் அவரது நண்பர் அவரைப் பலவந்தமாய்ப் பிடித்து வர்ட்பூர்க் கோட்டையில் மாறுவேடத்துடன் அடைத்து வைத்து, பரிவுடன் பராமரித்து வந்தனர். அவரது குருப்பட்ட சிரசடையாளமான உச்சி மொட்டையில் (Tonsure) உரோமம், அதோடு தாடியும் மீசையும் திரண்டு செறிந்து அடர்ந்து வளரும்வரை லூத்தர் வர்ட்பூர்க் கோட்டையில் மறைந்திருந்து ஒரு போர்வீரன் கோலத்தில் கர்த்தரோடு சஞ்சரித்து வந்தார்.

லூத்தரை ஒளித்து வைத்திருந்த இடம் ஆரம்பத்தில் இரகசியமாயிருந்தபடியால், ஜெர்மனி நாடெங்கும் பெரும் பரபரப்பும் துயரமும் எழுந்தன. ஆல்பிரெக்ட் டுரர் **(Albrechat Durer)** என்ற பிரபல கலைஞர் லூத்தர் காணாமற்போன நிகழ்ச்சியைக் குறித்து, அவர் பகைவரால் கொலை செய்யப்பட்டிருக்கவேண்டும் என்ற கருத்துடையவராய்க் கண்கலங்கிப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:- ''பக்தர்களே பரிசுத்தாவியானவரால் ஏவப்பட்டு விசுவாசத்திற்காகப் போராடிய பரிசுத்தவானாகிய லூத்தர் இறந்து போனதைப் பற்றி வருந்தி என்னோடு கண்ணீர் சிந்துங்கள். பராபரன் இவருக்குப் பதிலாக வேறொரு பரிசுத்த விசுவாசியை அனுப்புமாறு என்னோடு ஆண்டவரை வேண்டிக்கொள்ளுங்கள்.''

வொர்மஸ் அரச சபை தீர்மானத்தின்படி ரோம சபைக்கும் சமூகத்திற்கும் புறம்பாக்கப்பட்டதால் இனிச் சுத்த சுவிசேஷ கிறிஸ்தவ விசுவாச திருச்சபையைக் கட்டுவதே தமது முக்கிய கடமை என்று அறிந்துகொண்ட லூத்தர், அதற்கான

திருப்பணிகளைச் சிந்தித்து செயல்படச் செய்வதில் சிரத்தை கொண்டார். வர்ட்புர்க் கோட்டையில் தலைமறைவாய் வாழ்ந்த காலத்தில் சுவிசேஷ திருச்சபைக்கு உயிர் அச்சாணி யாக வேண்டிய புதிய ஏற்பாட்டை ஜெர்மனிய மொழியில் ஆக்குவித்தார். பின்னர் பழைய ஏற்பாட்டையும் ஜெர்மானிய மொழியில் ஆக்கம் செய்து மக்கள் தங்கள் தாய் மொழியில் தேவ வசனத்தை வாசித்தறிந்துகொள்ளுமாறு செய்தார். இது லூத்தர் மகான் சாதித்த ஓர் அற்புதச் சாதனையாகும். நாடெங்கும் சுத்த சுவிசேஷ திருச்சபைகள் எழும்புவதற்கு இது ஓர் அடிப்படைக் காரணமாகும். கிறிஸ்தவ வேதாக மம் மக்களுடைய கண்களைத் திறந்துவிட்டது. பரிசுத்த வேதாகமத்தின்மூலமாக மக்கள் சத்தியத்தைக் கண்டுகொண் டார்கள். கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தின் அத்தியா வசியத்தைப் புரிந்துகொண்டார்கள். இறைவன் இயேசு கிறிஸ்து அவர்களுக்குச் சடங்காச்சார அடிமை வாழ்விலிருந்து விடுதலையளித்தார். கிறிஸ்துவின் இரத்தம் அவர்களுக்கு இலவசமாய்ப் பாவமன்னிப்பு அளிக்கவே, கிறிஸ்துவின் கிருபையால் சாந்தியும், சமாதானமும், பேரின்பமும் பெற்றார் கள். தாங்கள் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தின்மூலமாக இலவசமாகப் பெற்ற பேரின்பத்தைப் பிறருக்கும் அள்ளி வழங்க ஆரம்பித்தார்கள். அதன் பயனாக ஜெர்மனி, சுவீடன், பின்லாந்து, நார்வே, டென்மார்க், ஐஸ்லாந்து போன்ற நாடுகளிலெல்லாம், பின்னர் உலகெங்கும் இந்த சுவிசேஷ கிறிஸ்தவ விசுவாச சபைகள் எழும்பி, கிறிஸ்துவுக்கு உத்தம சாட்சி பகர்ந்து வருகின்றன.

லூத்தர் பின்னர் தமது உயிர்போனாலும் பரவாயில்லை என்ற வீரம் கொண்டவராய் வர்ட்புர்க் கோட்டையினின்று வெளிப்போந்து, நாடெங்கும் சுவிசேஷ கிறிஸ்தவ விசுவாச திருச்சபைகளை நிறுவுவதில் முனைந்து நின்றார். தாய்மொழி யில் மக்கள் இதயப்பூர்வமாக இறைவன் இயேசு கிறிஸ்துவை வழிபடுவதற்கு வழி வகுத்துத் தந்தார்; கிறிஸ்துவின் கிருபை யால், கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தால் இரட்சிக்கப்

பட்ட மக்கள் இயேசு கிறிஸ்துவின் சிலுவைப் புண்ணியத்தை அகங்களிந்து போற்றிப் பாடித் துதிப்பதற்கு ஞானப்பாட்டுகள் யாத்துக் கொடுத்தார். கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் அன்பிலும் அடியார்கள் வளர்வதற்கேற்ற எண்ணிறந்த கிறிஸ்தவ நூல்கள் இயற்றிக்கொடுத்தார். மக்களைக் கிறிஸ்துவண்டை வழிநடத்தும் உருக்கமான பிரசங்கங்கள் பல பொழிந்தருளினார். சுருங்கக்கூறின், தமது வாழ்க்கையையே கிறிஸ்துவின் திருநாம மகிமைக்காகத் தாரை வார்த்துவிட்டார்.

இது இவ்வாறிருக்க, அரச சபையினர் மீண்டும் லூத்தரை ஒழித்துக் கட்டுவதற்காக ஆக்ஸ்பர்க்கில் (Augsburg) 1530-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 25-ஆம் தேதி ஒரு மாபெரும் மாநாடு கூட்டினர். ரோமச் சபையாருக்கும், தங்களுக்குமுள்ள வேறுபாடுகளை லூத்தரது சுவிசேஷ சபையினர் இரத்தினச் சுருக்கமாய் எழுதித் தெரிவிக்க வேண்டுமென்று ஐந்தாம் சார்லஸ் அரசன் ஆணை பிறப்பித்திருந்தான். இந்த அரச ஆணையின்படி லூத்தரது சபையினர், லூத்தர் மெலாங்தோன் மகான்களது உதவியால் தங்கள் விசுவாச அறிக்கையை ஆக்ஸ்பர்க் அரச சபையில் சமர்ப்பித்தார்கள். ஆக்ஸ்பர்க் விசுவாச அறிக்கை அகில உலக பிரசித்தி பெற்றுள்ளது. இந்த விசுவாச அறிக்கை சத்திய வேதாகமத்தை அடிப்படையாக கொண்டு எழுந்துள்ளது என்பதையறிந்த ரோமச் சபை பிரதிநிதிகள் யாது செய்வதென்றறியாது, திருகத் திருக விழித்தார்கள். சத்தியத்தை அழிக்க யாரால் இயலும்? சத்தியம் சத்தியமே! அக்கால போப்பு மார்க்கம் இச்சத்தியத்திற்காகப் போராடிய விசுவாச வீரராகிய மார்ட்டின் லூத்தரை கொன்றொழிக்கத் தீர்மானித்தது. எனினும், துருக்கியராலும், பிரஞ்சுக்காரராலும் மீண்டும் போர் ஆரம்பமாகலாமென்று அரசியலார் அறிந்தபடியால், லூத்தரது சுவிசேஷ இயக்கத்தை வேர் அறுக்க அவர்களுக்கு வாய்ப்பு ஏற்படவில்லை. லூத்தரைக்

கர்த்தர் அற்புதமாய்ப் பாதுகாத்துப் பராமரித்து வழிநடத்தி வந்தார்.

லுத்தர் காலத்தில் அப்போர் மூளவில்லை. எனினும் போருக்கு ஆயத்தப்பட்டுக்கொண்டிருந்த ஐந்தாம் சார்லஸ் அரசன் பத்து ஆண்டுக் காலமாக ஜெர்மனி விவகாரத்தில் ஈடுபட்டு நேரமற்றுப் போனபடியால், லுத்தருக்கும், லுத்தரின் கொள்கைக்கும், லுத்தரின் சபைக்கும் நேரவிருந்த ஆபத்து நேராதே போய்விட்டது. கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசமே உலகத்தை ஜெயிக்கிற ஜெயம்.

இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் வெட்கப்படுவதில்லையென்று வேதம் சொல்லுகிறது (ரோமர் ***10:11***).

# 7

# இல்லறவாசியான மார்ட்டின் லூத்தர்

''உன் மனைவி உன் வீட்டோரங்களில் கனிதரும் திராட்சக் கொடியைப்போல் இருப்பாள்; உன் பிள்ளைகள் உன் பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப்போல் இருப்பார்கள். இதோ, கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன் இவ்விதமாய் ஆசீர்வதிக்கப்படுவான்'' (சங். 128:3,4).

தனக்குப் பெரும் பேர் கிட்ட வேண்டுமாயின், தான் சாமியாராகித் தீரவேண்டும் என்ற தீர்மானத்துக்கு வந்து, ஒரு காலத்தில் வலியப் போய்த் தன்னை ஒரு சந்நியாசியாக ஏற்றுக்கொள்ளுமாறு ஒரு சாமியார் மடத்தில் சேர்ந்தவர் மார்ட்டின் லூத்தர்! தான் எண்ணியபடி அவர் சந்நியாசி ஆனவுடன் சாந்தி கிட்டவில்லை. அவர் எத்தனையோ புண்ணியங்களைச் செய்தும், பக்திக் கிரியைகளை ஆற்றியும், மார்க்கச் சடங்காச்சாரங்களை நிறைவேற்றியும், இரட்சிப்பின் நிச்சயம் கிடைக்கவில்லை. ஆனால் விசுவாசத்தால் இயேசு இரட்சகரைத் தன் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டபோது, அவருக்கு இரட்சிப்பின் நிச்சயமும் பேரின்பப் பெருக்கும் கிட்டின. எனவே, சந்நியாச மார்க்கம் ஒருவனை இரட்சிக்காது என்ற சத்தியத்தை உலகுக்கு எடுத்துக்காட்ட விரும்பியவராய், கடவுளால் ஏற்படுத்தப்பட்ட பரிசுத்த விவாகத்தின் ஆசீர்வாதத்தைப் பெற்று, உலகுக்கோர் முன்மாதிரியான சிறந்த கிறிஸ்தவ இல்லறவாசியாகத் திகழ எண்ணினார். ஆனால் அவருக்கு இப்பொழுது நாற்பத்திரெண்டு வயதாகியிருந்தது. ரோமச் சபைக்கும் சமூகத்திற்கும் புறம்பாக்கப்பட்டிருந்த அவர், போப்புத் தோழர்களால் எந்த நிமிடத்திலாகிலும் கொலை செய்யப் படலாம். இவ்வாறு போப்புவால் பதிதனாகப் புறக்கணிக்கப்பட்ட லூத்தரை எந்தப் பெண் மனமுவந்து மணந்துகொள்ள

முன்வருவாள்? மார்ட்டின் லூத்தர் திடீரென்று நினையாத நேரத்தில் போப்பு மார்க்கத்தாரால் கொலை செய்யப்பட்டு விடுவார் என்ற செய்தியை நன்கு அறிந்திருந்த போதிலும், அத்தகைய சிறந்த கிறிஸ்தவ விசுவாச வீரருக்குத் தன்னால் இயன்ற உதவிசெய்து, அவருக்கு வாழ்க்கை துணைவியாய் அமைந்து பணிபுரிய மனமுவந்து முன்வந்தாள் கத்தரீனாள் வொன் போரா (**Catherine Von Bora**). இந்த அம்மையாருக்கு அப்பொழுது இருபத்தாறு வயது.

லூத்தரது விசுவாச சத்தியங்களைக் கேள்வியுற்ற அநேக ரோமச் சபை சாமிமார் மடங்களைவிட்டு வெளியேறிக் கிறிஸ்தவ விசுவாச வீரர்களாய், சுத்த சுவிசேஷத்தை ஆர்வத்தோடு மற்றவர்களுக்கும் பிரசங்கிக்கத் தொடங்கினார்கள். விட்டென்பர்க்கிலுள்ள அகுஸ்தீன மடத்திலுள்ள சாமியார் அத்தனை பேரும் கிறிஸ்தவ விசுவாசிகளாய் வெளியேறி கிறிஸ்துவுக்குச் சாட்சிகளாய்த் திகழவே, அந்த மடம் முழுதும் காலியாகிவிட்டது. ரோமச் சபை சந்நியாசிகளைப் போல், கன்னியாஸ்திரீகளில் சிலரும் லூத்தரது சுத்த சுவிசேஷ கிறிஸ்தவ விசுவாச நெறியினைக் கேட்டு, மடத்தைவிட்டு வெளியேறினர். அவ்வாறு நிம்ச்சன் (**Nimpsehen**) மடத்தினின்று பன்னிரு கன்னியாஸ்திரீகள் கிறிஸ்தவ விசுவாசிகளாய் உத்தம கிறிஸ்தவ விசுவாச வாழ்க்கையாற்றுமாறு முன் வந்தனர். அப்பன்னிருவருள் கத்தரீனாள் அம்மையாரும் ஒருவர் ஆவர். ''நான் மணம் செய்தால், சீர்திருத்தச் சிங்கமாகிய மார்ட்டின் லூத்தரையே மணந்து அவருக்குத் துணைபுரிவேனேயன்றி, வேறொருவரையும் மணந்து கொள்ளச் சம்மதியேன்'' என்ற முடிவுக்கு வந்திருந்தாள் அம்மங்கைத் திலகம்.

மார்ட்டின் லூத்தர் தமது திருமணக் காரியத்தைப்பற்றி உலகத்திலுள்ள எந்த மனிதனுடைய ஆலோசனையையும் தேடாது, கர்த்தர் ஒருவருடைய சித்தத்தை அறிந்து நிறைவேற்றுவதற்காக வெகு ஊக்கமாய் ஜெபித்தார். ஆண்டவருடைய சித்தத்தையறிந்து அவருடைய சம்மதம் பெற்ற

அந்த வாரத்தில்தானே 1525-ஆம் ஆண்டு ஜூன் 13-ஆம் தேதி கத்தரீனாள் அம்மையாரை மார்ட்டின் லூத்தர் திருமணம் செய்துகொண்டார். தான் இப்படிச் செய்தது பரலோகத்துப் பரம பிதாவுக்கும், பூலோகத்து பெற்றோருக்கும், தெய்வ தூதர்களுக்கும், கிறிஸ்தவ விசுவாசிகளுக்கும் மிகுந்த மகிழ்ச்சியை உண்டுபண்ணும் என்று அவர் தமது நண்பர்களுக்குத் தெரிவித்தார்.

திருமணம் நிகழ்ந்து இரு வாரங் கழித்து வழக்கமான கல்யாண விருந்து வைபவம் கொண்டாடப்பட்டது. லூத்தருடைய அருமைத் தாயாரும், தந்தையாரும் அக்கொண்டாட்டத்திற்கு வந்து லூத்தர் தம்பதிகளை வாழ்த்தி தங்கள் அன்புச் சின்னமாக ஒரு வெள்ளிக் கிண்ணம் பரிசளித்தார்கள். அது இப்பொழுது கிரீட்ஸ் வெல்ட் பல்கலைக் கழகத்தில் பாதுகாக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளது. விட்டென்பர்க்கிலுள்ள அகுஸ்தீனிய சந்நியாச மடம் இப்பொழுது வெறுமையாய் இருந்தபடியால், அம்மடம் லூத்தர் தம்பதிகள் வசிப்பதற்கு நியமுகப் பிரபுவால் வெகுமதியாகக் கொடுக்கப்பட்டது.

லூத்தர் நடத்திய இல்லற வாழ்க்கை எத்தனையோ குடும்பத்தினருக்குச் சிறந்த முன்மாதிரியாக இருந்து வந்துள்ளது. கத்தரீனாள் வீட்டுக் காரியத்தை முழுப் பொறுப்பேற்று வெகு ஞானமாய்க் கவனித்துக்கொண்டபடியால், லூத்தர் தமது முழு இருதயத்தோடும், முழு பலத்தோடும் திருச்சபை சீர்திருத்த வேலையில் ஈடுபட ஏதுவாயிற்று. திருமணத்திற்கு முன்னர் வேர்வையால் நனைந்து கிடந்த படுக்கையை ஒழுங்குபடுத்துவதற்குக்கூட உதவி செய்ய அவருக்கு ஆள் இருந்ததில்லை. இரவு நெடுநேரம்வரை கண் விழித்துக் கடின வேலை செய்து அலுத்துப்போகும் லூத்தர், தமது படுக்கையை நன்கு சரிப்படுத்துவதற்குக்கூட நேரமின்றி தொப்பெனப் படுக்கையில்வீழ்ந்து அயர்ந்து உறங்கி விடுவார். இப்பொழுது அவருடைய உடல் நலத்தைக் கத்தரீனாள் கண்ணும் கருத்துமாய்க் கவனித்துக்கொண்டபடி

யால், அவர் முழுக்க முழுக்கச் சுவிசேஷத் திருப்பணியில் மூழ்கிவிட முடிந்தது. போப்பு மார்க்கத்தாரால் சொல்லொண்ணாத் துயர் வந்துறுங்கால், கத்தரீனாள் லூத்தரை அருமையாகத் தேற்றி ஆறுதல்படுத்துவது வழக்கம். ''நம் மீட்பர் உயிரோடிருக்கையிலே நமக்கென்ன குறையுண்டு நீர் சொல்லும், கணவரே'' என்று கவலையில் சில வேளைகளில் ஆழ்ந்திருக்கும் லூத்தரை ஆறுதல்படுத்துவதில் கைதேர்ந்த பாக்கியவதி கத்தரீனாள்! போப்பு மார்க்கம் சர்வாதிகாரம் படைத்திருந்த 16-ஆம் நூற்றாண்டிலே தனி ஒரு மனிதன் அவ்வல்லரசை எதிர்த்துப் போராடுவதென்றால் எளிதான காரியமா? எப்பக்கமும் இடர்களாலும், இன்னல்களாலும், ஆபத்துகளாலும் சூழ நொறுக்கப்பட்ட லூத்தருக்கு ஓர் ஆறுதலளிக்கும் அருமை வாழ்க்கைத் துணைவியார் கிடைத்தது கர்த்தரின் கிருபைதானன்றோ?

லூத்தரில் காணப்பட்ட ஆற்றலுக்கும் மன அமைதிக்கும் காரணம், அவரது இடைவிடாத ஜெப ஜீவியமேயாகும். அடிக்கடி உரத்த சத்தமாய் வானத்தை அண்ணாந்து பார்த்து வெகு உருக்கமாய் ஜெபிப்பார். ஒரு குழந்தை தன் தந்தையோடு நேருக்கு நேராய், முகம் முகமாய்ப் பேசுவதுபோல லூத்தர் இயேசு கிறிஸ்துவோடு பேசுவார். நெருக்கடியான கட்டங்களில் அவர் கடவுளோடு போராடி ஜெபிப்பது வழக்கம். ஜெபம் அவருடைய வாழ்வில் அதிசயிக்கதக்க ஜெயத்தைக் கொணர்ந்தது. மார்ட்டின் லூத்தரைப்போல அல்லும் பகலும் அயராது அக்காலத்தில் உழைத்தவர்கள் வேறொருவரும் இருந்திருக்கமாட்டார்கள் என்றுதான் சொல்லவேண்டும். அவர் செய்த பிரசங்கங்கள் பலப்பல. அவர் வாசித்துள்ள நூல்கள் எண்ணிறந்தன. அவர் முன்னூற்றைம்பது நூல்களுக்கு மேலாக எழுதி அச்சிட்டு வெளியிட்டுள்ளார். அவர் எழுதி வைத்துப்போன பிரசங்கங்கள் ஏராளம். பரிசுத்த வேதாகமத்தை ஜெர்மன் மொழியில் திறம்பட மொழிபெயர்த்து வெளியிட்ட அந்த ஒரு திருத்தொண்டேபோதும் அவருக்கு உலகமுள்ளளவும் புகழைத்

தருவதற்கு! இந்த அரிய பெரிய சாதனையைத்தவிர மற்று மொரு பயன்மிக்க புத்தகத்தையும் அவர் அகில உலகத்திற் கும் ஆக்கித் தந்துள்ளார். அதுதான் இறவாப் புகழ்படைத்த ஞானோபதேச வினா விடையாகும் (Catechism). அவர் பாடியுள்ள ஞானப்பாட்டுகள் ஞானத் திரவியமாகும். ஒரு தடவை சொன்னதை மீண்டும், மீண்டும் சொல்லிக் கொண்டிராமல், பலப்பல புதுப்புதுக் கருத்துக்களையும், அருளுரைகளையும், அமுத மொழிகளையும் அள்ளிக்கொட்டு வார். பரிசுத்தாவியானவர் அவரை ஆண்டு நடத்தினார் என்பதற்கு அவரது பரிசுத்த வாழ்க்கையே சாட்சிசொல்லும். மரத்தை அதன் கனிகளால் அறிந்துகொள்ளலாம் அல்லவா? அனுதினமும் தனது சிலுவையை எடுத்துக்கொண்டு இயேசு நாதரைப் பின்பற்றிய உத்தம விசுவாச அடியான் மார்ட்டின் லூத்தர் ஆவார்.

1529-ஆம் ஆண்டில் ஸ்பயர் (Speier) மாநகரில் நடந்த மாநாட்டிற்குப் பின்னர் லூத்தரின் கொள்கையைப் பின் பற்றிய சுத்த சுவிசேஷ கிறிஸ்தவ விசுவாச மக்களுக்கு, ''எதிர் மறுப்போர்'' (Protestant) என்ற பெயர் வழங்கலா யிற்று. காரணம் போப்பு மார்க்கத்தார் பெரும்பான்மைக் கட்சியினராய் ஸ்பயர் மாநாட்டில் நிறைவேற்றிய தீர்மானங் களை லூத்தரது கட்சியினர் ஏற்றுக்கொள்ள முடியாது என்று தைரியமாய் மறுப்புக்கூறி, தங்கள் கிறிஸ்தவ விசுவாச வேத சத்தியங்களுக்காய் வெகு உறுதியாய் நின்றார்கள். 'Protest' என்னும் பதத்திற்கு 'மறுப்பு' என்னும் பொருள் மட்டு மல்லாமல், சாதித்து உறுதிப்படுத்துதல் என்னும் பொருளும் உண்டு. பின்னர், ஆக்ஸ்பர்க் விசுவாச அறிக்கையால் கிறிஸ்தவ வேதாகம விசுவாச சத்தியங்களை லூத்தர் கொள்கையினர் உறுதியாய்ச் சாதித்து நின்றார்கள். அம் மகத்தான விசுவாச சாதனைக்காக அநேகர் இம்சிக்கப்படவும் உயிரிழக்கவும் நேரிட்டது.

மார்ட்டின் லூத்தர், மெலாங்கோன், ஸ்பாலாத்தீன், தூரிங் ஆகிய விசுவாச வீரர்கள் ஒன்று சேர்ந்து, நாடெங்கும்

சுற்றித் திரிந்து, சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, வேதாகமச் சத்தியங்களை மக்களுக்கு எடுத்துக்கூறி, அநேக சுவிசேஷ சபைகளை நிறுவினார். இவ்வாறு ஜெர்மன் நாடெங்கும் பரவிய சுவிசேஷத் தீபம், பின்னர் ஐரோப்பாவெங்கும் பரவி, அதன் பின்னர் அகில உலகமெங்கும் பரவிவருகிறது. ''நீங்கள் உலகமெங்கும் போய்ச் சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள்'' என்ற நமதாண்டவருடைய கடைசிக் கட்டளையை சிரமேற்கொண்டு லூத்தரின் திருத்தொண்டர்கள் உலகமெங்கும் சுவிசேஷத் தீபத்தை எடுத்துச் சென்றுள்ளனர்.

1706-ஆம் ஆண்டு ஜுலை மாதம் 9-ஆம் தேதி சீகன் பால்க் ஐயர், புளூட்சோ ஐயர் ஆகிய இரு லூத்தரன் மிஷனெரிமார் தரங்கம்பாடியில் வந்திறங்கி, தமிழ்நாட்டு மக்களுக்கு இயேசு கிறிஸ்துவைப்பற்றிப் பறைசாற்றினர். தமிழ் மக்களுக்குத் தமிழ் மொழியிலே பரிசுத்த வேதாகமத்தை முதலாவது மொழிபெயர்த்து, அச்சிட்டு வழங்கிய பெருமை லூத்தரன் திருத்தொண்டரையே சாரும். லூத்தரன் தொண்டராகிய சீகன்பால்க் ஐயர் புதிய ஏற்பாட்டைத் தமிழில் மொழிபெயர்த்து, 1714-ஆம் ஆண்டில் அச்சிட்டு வெளியிட்டபோது, ''இந்தியாவிலுள்ள பொக்கிஷம் அனைத்திலும் இதுவே தலைசிறந்த மகத்தான பொக்கிஷம்'' என்று குறிப்பிட்டார்.

மார்ட்டின் லூத்தருக்கு மூன்று ஆண் பிள்ளைகளும், மூன்று பெண் பிள்ளைகளும் பிறந்தார்கள். அப்பிள்ளைகள் சிசுவிலிருந்தே கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும், அன்பிலும் வளர்ந்து வந்தார்கள். லூத்தர் அப்பிள்ளைகளோடு அன்புடன் கூடிப்பாடி ஜெபிப்பார். அவருக்கு இரண்டாவதாகப் பிறந்த மகள் பத்தாவது மாதத்தில் உயிர் துறந்தபோது, அக்குழந்தை தமது பரமபிதாவின் மடியில் பத்திரமாக இருக்கிறதென்ற உண்மையை அறிந்தவராய் ஆறுதல் அடைந்தார். அவருக்குப் பிரியமான மகள் மகதலேனாள் பதினான்காம் பிராயத்தில் கர்த்தருடைய

இராசியத்தைச் சேர்ந்தாள். அப்பொழுது லுத்தர்: ''என் அருமை மகதலேனாளே, நீ கிறிஸ்துவின் இராசியத்தில் நட்சத்திரத்தைப்போல பிரகாசிக்கிறாய்; நீ நமது பரம தந்தையிடம் வாழ்கிறாய்'' என்று கூறி பக்கத்தில் துக்கத்தோடு நின்றவர்களைப் பார்த்து, ''நான் ஒரு கிறிஸ்தவ விசுவாசியைப் பரலோகத்துக்கு அனுப்பியிருக்கிறேன்'' என்றார். மற்ற நான்கு பிள்ளைகளும் லுத்தர் காலத்திற்கு பின்னரும் வாழ்ந்து, சிறந்த கிறிஸ்தவ விசுவாசிகளாகத் திகழ்ந்தார்கள்.

சமாதானம் என்றால் இறைவன் இயேசு கிறிஸ்து தரும் சமாதானத்தையே உண்மையான சமாதானமாகக்கொண்டார் லுத்தர். உலகம் தரும் சமாதானத்தை அல்ல, சாத்தான் தரும் சமாதானத்தை அல்ல, மாம்சம் தரும் சமாதானத்தை அல்ல, அல்லது மனிதர் தரும் சமாதானத்தை அல்ல, இயேசுநாதர் தரும் சமாதானத்தையே விரும்பினார் லுத்தர். இயேசுநாதர்தான் சமாதான பிரபு. இயேசுதான் சமாதானம். இயேசுவையும் சமாதானத்தையும் பிரிக்க முடியாது. ஆகவே, உண்மையான, நிலைவரமான, நித்திய, பரிசுத்த சமாதானம் வேண்டுமானால் உலகம் இயேசு சுவாமியில்தான் அடைந்து தீரவேண்டும். இறைவன் இயேசு எங்கிருக்கிறாரோ, அங்கே உண்மையான சமாதானம் உண்டு. உலகம் முழுவதும் சமாதானம் பெற்றுச் சுபிட்சம் பெற, நாம் உலகத்துக்கு இயேசு சுவாமியை வழங்க வேண்டும். மக்களைக் கிறிஸ்து நாதரிடம் வழிநடத்துகிறவர்கள்தான் உண்மையாகவே சமாதானத்திற்காக உழைக்கிறவர்கள் ஆவார்கள். இவ்விதச் சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் தேவனுடைய புத்திரர் எனப்படுவார்கள் (மத். 5:9). இத்தகைய சமாதானத் திருப்பணியில் முனைந்து நின்றவர் மார்ட்டின் லுத்தர். சமாதானம்பண்ணும் திருப்பணியாற்றிக்கொண்டே, சமாதானத்தோடு, சமாதானப் பிரபுவின் திருப்பாதம் சேர்ந்தார் மார்ட்டின் லுத்தர்.

கிறிஸ்துவையும் கிறிஸ்துவின் அன்பு நெறியையும் அறவே மறந்தவர்களாய் மான்ஸ்பெல்டிலுள்ள இரு பிரபுக்கள் சண்டையிட்டபோது அவர்கள் அகத்தில் சமாதானப் பிரபுவாகிய இயேசு கிறிஸ்து வாசம்பண்ணுமாறு அவர்களைக் கிறிஸ்துவிடம் வழிநடத்துவதற்குத் தமது உடல் நலத்தையும் பெரிதென்று பாராது 1546-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் தமது பிறந்தகமாகிய ஐஸ்லேமுக்குச் சென்றார். கொடிய குளிரில் பிரயாணம் செய்தமையால், அவருக்குக் கொடிய வியாதி ஏற்பட்டது. அவ்வியாதியின் மத்தியிலும் அவர் சமாதானப் பணியைத் தீவிரமாகச் செய்து வந்தார். பிப்ரவரி 17-ஆம் தேதி அப்பிரபுக்கள் கிறிஸ்துவுக்குள் சமாதானம் பெற்று, ஒருவரையொருவர் நேசித்து, கிறிஸ்தவ அன்பில் ஊன்றக் கட்டப்பட்டார்கள். லூத்தரின் திருப்பணி சித்தி பெற்றது. அன்று இரவு அவர் வழக்கம்போல திறந்த சன்னலண்டை முழங்காற்படியிட்டு உரத்த சத்தமாய் ஜெபித்தார். திருச்சபையின் நாயகரான இயேசு சுவாமிதாமே தமது சபையைத் தம்மைப் பற்றும் விசுவாசத்தில் காத்துக்கொள்ள வேண்டும் என்றும், கிறிஸ்தவ விசுவாசிகளைச் சத்திய சுவிசேஷத்தில் கறைபடாமல் காப்பாற்றவேண்டும் என்றும் வெகு ஊக்கமாக மன்றாடினார். இந்த மன்றாட்டில் லூத்தர் தமது இதயத்தைக் காணிக்கையாகக் கிறிஸ்துவின் பாதம் ஊற்றிவிட்டார். அதன் பின்னர் இருமலும், மூச்சுத் திணறலும் அவருக்கு அதிகரிக்கவே, தாம் கிறிஸ்துவை முகமுகமாய்ச் சந்தித்து அவரோடு விண்ணுலகில் வாழப்போகும் காலம் நெருங்கிவிட்டதென்பதை உணர்ந்தார். அவர் படுக்கைக்குப் போகுமுன்: ''சத்திய பரமனாகிய இயேசு கிறிஸ்துவே! நீர் உமது விலையேறப்பெற்ற இரத்தத்தினால் என்னை மீட்டுக்கொண்டீர். உம்மைப் பற்றும் விசுவாசத்தினால் நான் இரட்சிக்கப்பட்டுள்ளேன். உமது கையில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்'' என்று இருமுறை சொன்னார். அவர் இறுதியாகப் பேசிய வார்த்தை இதுவே. மார்ட்டின் லூத்தர் தமது 63-ஆம் வயதில் 1546-ஆம் ஆண்டு பிப்ரவரி

18 ஆம் தேதி காலை 2-45 மணிக்கு அமைதியோடு தான் அருமையாக நேசித்து சேவித்த இயேசுவின் பாதம் சேர்ந்தார்.

மார்ட்டின் லூத்தரது சடலம் அவரது தாயகமாகிய ஐஸ்லேபனிலிருந்து அலுவலமாகிய விட்டென்பர்க் பல்கலைக் கழகத்திற்குக் கொண்டுவரப்பட்டு, அவர் ஏறத்தாழ முப்பது ஆண்டுகட்கு முன் 95 நியாயங்களை எழுதி ஒட்டி கிறிஸ்தவ விசுவாச சுவிசேஷ பிரசங்க வீர முழக்கம் செய்த விட்டென் பர்க் ஆலயப் பிரசங்கப் பீடத்தின் அடியில், உயிர்தெழுதலின் நாள் மட்டும் இளைப்பாறுதலுக்கெனக் கிறிஸ்தவ விசுவாச வெற்றி மகிமையின் வீர அடக்கம் செய்யப்பட்டது.

மார்ட்டின் லூத்தர் மரித்தும் இன்னும் பேசுகிறார். ''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்'' என்ற சத்திய ஜீவ வாக்கு இன்றும் நமது காதுகளில் தொனித்துக்கொண்டே யிருக்கிறது. புருஷியா மன்னனான மூன்றாம் வில்லியம் 1821-ஆம் ஆண்டில் மார்ட்டின் லூத்தரது உருவச்சிலை எழுப்பி, அவரைக் கௌரவித்துள்ளான். மார்ட்டின் லூத்தர் கிறிஸ்தவ வேத சத்தியத்தை நிலைநாட்டிய வொர்ம்ஸ் மாநகரில் 1868-ஆம் ஆண்டில் மார்ட்டின் லூத்தரது மகத் தான சாதனையை நினைவுபடுத்த ஓர் அற்புதமான அன்புச் சின்னம் உருவாக்கப்பட்டது.

மார்ட்டின் லூத்தர் இதயத்தினின்று பொங்கிப் பெருக் கெடுத்தோடிய ஒரு விசுவாசக் கீதம் இன்றும் உலகெங்கும் பக்தியோடு பாடப்பட்டு வருகிறது. அடியில் காணப்படுவது தான் அந்த ஞானப்பாட்டு:

கர்த்தர் தான் எங்கள் துருக்கமும்
அரண் பலமுமாமே;
உண்டாம் இக்கட்டனைத்தையும்
அழிப்பார் அவர்தாமே.

Pub. No. 45

''வாயும் பேசும் வாழ்க்கையும் பேசும்'' என்பர். ஆனால், வாயினும் வாழ்க்கையே அதிக வேகமாய், விறு விறுப்பாய், அழுத்தமாய், ஆழமாய், உணர்ச்சி ததும்பப் பேச வல்லது. வாய் மறைந்தாலும், வாழ்க்கை பேசிக் கொண்டேயிருக்கும். அவ்வாறே மார்ட்டின் லூத்தர் மரித்தும் இன்னும் பேசுகிறார்.

''விசுவாசத்தினால் நீதிமான் பிழைப்பான்'' (ரோமர் 1:17) என்ற வேத வாக்கினால் ஆழமாய்த் தொடப்பட்ட அவர், அக்காலத்தில் தேவ பிரிதிநிதியாக கருதப்பட்ட போப்பின் பாவ மன்னிப்புச் சீட்டு விற்பனையையும், மற்ற குருட்டு மூடநம்பிக்கையையும் எதிர்த்துப் போராடினார். பாவமன்னிப்புச் சீட்டினால் அல்ல, விசுவாசத்தினாலேயே பாவம் மன்னிக்கப்படும் என்று எங்கும் பிரசங்கித்தார். ஜீவ மார்க்கத்தைக் குறித்து பல புத்தகங்களை எழுதினார். சத்தியத்திற்காக தன் ஜீவனையும் பணயம் வைத்தார். இறுதியில் சத்தியத்தை விசுவாசிக்கும் சபைகளை எங்கும் நிறுவினார். இவருடைய வாழ்க்கை வரலாறு யாவருக்கும் எழுச்சியை ஊட்டுவதாய் அமைந்துள்ளது.

இன்றைய உலகுக்கு ஒன்றல்ல, இரண்டல்ல, எண்ணிறந்த மார்ட்டின் லூத்தர்கள் வேண்டும்!

MARTIN LUTHER

D. Koilpitchai

விலை ரூ. 7-00


EVANGELICAL LITERATURE SERVICE
95-A, VEPERY HIGH ROAD, MADRAS - 600 007.